உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 17 } விளம்பி௵ வைகாசி௴ 10—6—58 { இதழ் 7

உ

திருச்சிற்றம்பலம்

போன்றயங் கிலங்கோளிங் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கோன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## திருக்கயிலாயபரம்பரையும் ஆதீனமும்

'கயிலாயம்' என்பது தனக்குமேல் ஒன்றில்லாது தானே முடிவிடமாயிருப்பதைக் குறிப்பதேன்று முன்னோர் சோல்லினர். அது போருத்தமே. சிவபிரான் வீற்றிருந் தருளும் கயிலாயத்தினும் மேலானதோன்று இல்லை. யார்க்கும் தன்னை அறிவரியான், என்றும் மன்னி வீற்றிருக் கும் திருக்கயிலை மாமலையினும் மேலானது யாது உளது? 'ஐயர் (சிவம்) வீற்றிருக்கும் தன்மை'யும், அளப்பரும் பெருமையும், மெய்யோளி தழைக்கும் தூய்மையும் உடைய திருக்கயிலையை, இவ்வுலகில் உள்ள மலைகளைப்போல் எண்ணலாகாது. சிவபிரானார் எல்லாம் கடந்த நிலையில் இருப்பவர். அங்கு அவர்க்கு இடம் ஆவது திருக்கயிலை யாகும். ஆதலால். அதைஎன்னேன்று உணர்தல் உண்மை யானதாகும்?

சிவபிரான் உள்ள இடம் அருள்வெளி, அவ்வருள் வெளி (சிவஞாநாகாசம்), அறிவுவெளியை (பசுஞாந காசத்தை)க் காட்டிலும் பரப்பிலும் பெரியது. நமது புறவெளி யினும் (ஆகாசத்தினும்) அகவெளி (மனம் ஆகிய ஆகாசம்) பெரியது. அதனினும் அறிவு (ஜீவபோத) வெளி பெரியது. எல்லாவற்றையும் தன்னுட் கொண்டு, அங்கு இங்கு என்னாத படி எங்கும் நிறைந்த வெளியே அருள்வெளி. அவ் வெளியில், சிவபிரான் இருக்கின்றான் எனில், அங்குள்ளதே திருக் கயிலாயம். 'தன் அருள்வெளிக்குளே அகிலாண்டகோடி யெல்லாம் தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்தது எது? என்று தாயுமானவர் வினாவியது இங்கு அறியத்தக்கது.

அவ் வருள்வெளியிலிருந்து, விண் வெளிக்கு உட்பட்ட மண்ணுலகத்துயிர்கட்கு, ஆசிரியர் வாயிலாக உணர்வு வரும் வழியே (பரம்பரையே) ஞானகுருசந்தான மார்க்கம். மண்ணுலகுயிர்களுக்குத் திருவருள் விளக்கம் உண்டாகும் வழியே அருளாறு - ஞானபரம்பரை. அப்பரம்பரை, மானிடச் சட்டை தாங்கி வந்து பரமசிவமே குருவாய் நின்று உபதேசிக்கும் முறைமையில் அமையும். அப்படி அமைத்த பரம்பரை பலபல இருந்தன. இன்றும் சில இருக்கின்றன.

பொய்கண்டார் காணாப் புனிதம் எனும் அத்துவித மெய் கண்ட நாதரைத் தலைவராகக்கொண்ட குரு பரம்பரையை மட்டும் திருக்கயிலாய பரம்பரை என்றது ஏன்? இது தக்க வினாவே. இதற்கு விடைதான் எளிதிற் கிடைக்காது.

திருக்கயிலையில் இறைவன் (1) திருநந்தி தேவர்க்குச் சிவநெறியை ஓதியருளினான். அவர் (2) சனற்குமார முனி வர்க்கும், அவர் (3) சத்தியஞான தரிசனிகட்கும், அவர் (4) பரஞ்சோதி மாமுனிகட்கும் அருளினார். இந்நால்வரும் திருக்கயிலையில் இருந்து சிவநெறி பெற்றனர். அதனால், இவர் நால்வரும் அகச்சந்தான குரவர் எனப் போற்றப் பெறுகின்றனர். இது திருக்கயிலாய பரம்பரை. இப் பரம் பரையிலி[illegible] திருவருள் மண்ணுலகிற்கு வந்த வழியில்

வேறுபாடுண்டு. சகல வர்க்கத்துயிர்கட்கு மானிடச் சட்டை சாத்தி வந்து உபதேசிக்கப்பேற்று விளங்கிய திருவருள் வழியாகும் இங்கு உள்ள குருபரம்பரை எல்லாம்.

மேய்கண்டார்க்குச் சிவபிரான் அவ்வாறு மானிடச் சட்டை சாத்தி வந்து உபதேசித்தானல்லன். ஆயினும், அது போல்வது அன்று என்றும் சோல்லல் இயலாது. பரஞ் சோதிமா முனிகள் வான்வழியே வந்து மெய்கண்டதேவர்க்கு உபதேசித்தவாறு, யார்க்கும் எங்கும் எவரும் உபதேசிக்க வில்லே. கதை பல இருக்கலாம். உண்மையில் இதுவே அத் தகைய வழியில் வந்தது. அதனுல்தான் மேய்கண்ட குரு பரம்பரையை மட்டும் திருக்கயிலாய பரம்பரை என்று வழங்கினர். நாட்டில் வேறு பல குருபரம்பரை இருந்தும் இதை மட்டும் திருக்கயிலாய பரம்பரை என்றதன் காரணம் பல இருக்கலாம். நாம் உணரக் கிடைத்தது இதுவே ஆகும். மேய்கண்டதேவர்க்கு மட்டும்தான் நேரே திருக்கயிலாய பரம்பரையின் நால்வருள் ஒருவராய பரஞ்சோதி மாமுனிகள் சிவஞானேபதேசம் புரிந்தருளினுர்கள்.

'சிவஞானபோத நேறிகாட்டும்' 'சிவஞானசித்தி நேறி காட்டும்' என்று குறித்தலால்' இந்நேறி மற்று எந்நேறிக்கும் வேறு என்று தேரியலாம்.

இஃது உபதேச மரபு, மேய்கண்டதேவர் சிவஞான போதத்தை நூல் வடிவில் அருளினுர் அதை உபதேச மரபுடன் இயைத்து மாணுக்கர் பலர்க்குப் போதித்தருளினுர். அது நூல் மரபு, மேய்கண்ட தேவர்க்கு முன்வரை உபதேச மரபும் அவர் முதலாக இருமரபும் நிகழ்ந்தன இத்திருக் கயிலாய பரம்பரையில்.

ஏனைய குரு பரம்பரையில் நூல் மரபும் உபதேச மரபும் முதற் குருவினிடத்திலிருந்து தோடங்கி நிகழ்கின்றன. இவ் வேறுபாடும் அறியத்தக்கது.

திருக்கயிலாய பரம்பரையின் அகச்சந்தானம் புறச் சந்தானம் என்னும் இரண்டு வகையுள், புறச் [illegible]னத்தின்

தோடர்ச்சியாகத் தோன்றியவை துறைசையாதீனமும் தருமையாதீனமும். இவ்விரண்டுள் துறைசையாதீனம் முதல் நூலாகிய சிவஞானபோதத்தையும் தருமையாதீனம் வழிநூலாகிய சிவஞானசித்தியாரையும் தமக்கு நெறியாகக் கோண்டு நூல் மரபைப் போற்றி வருகின்றன. 'சிவஞான போதநெறி' 'சிவஞானசித்திநெறி' என்று குறிப்பதை, இங்குக் கருதுக.

இவ்விரண்டாதீனமும் அருணமச்சிவாயர்க்குப் பின்னர் அவரிடத்தில் உபதேசம்பெற்ற இருவரைக் குருமூர்த்தியாகக் கோண்டன. துறைசையாதீனத்துக்கு முதற்குரு நமச்சிவாய மூர்த்திகள், அவர்க்கு உபதேசித்த குரு சித்தர்சிவப்ரகாசர். தருமையாதீனத்திற்கு முதற்குரவர் குருஞானசம்பந்தர். அவர்க்கு உபதேசித்தவர் சிதம்பரநாத மாசிலாமணி (கமலை ஞானப்ரகாசர்). அவர்க்குண்டான சிவஞானம் காழிக் கங்கை மெய்கண்டார் இடத்திலிருந்து தோடர்கின்றது. காழிக் கங்கை மெய்கண்டாரும் சித்தர் சிவப்பிரகாசரும் அருணமச்சிவாயர்க்கு மாணுக்கர் ஆவர். இவ்வுண்மையால் இவ்வாதீனம் இரண்டும் திருக்கயிலாய பரம்பரை ஆதல் நன்கு புலப்படும்.

வாழ்க திருக்கயிலாய பரம்பரை ! வளர்க உபதேச மரபு !

வயங்குக நூல் மரபு !

---

## EXTRACT FROM THE VISITORS BOOK

Velur Sri Vaithinathaswami Devasthanam
Vaithiswarankoil

Extremely happy to have had the privilege of Visiting this very well maintained temple.

(Sd.) Subbu Singh
Deputy Director of Annimal Husbandry,
Madras, 4—6—58
(True copy)

உ

குருபாதம்

# *ஸ்ரீ குருஞானசம்பந்தர் வரலாறு

**வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பார்புகழும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

—ஸ்ரீ சம்பந்தசரணாலயர்

ஆன்ம நேய ஞானச்செல்வத்தில் தலைசிறந்து விளங்குவது இந்திய நாடு. அதிலும் தென்தமிழ்நாடு மிக்க சிறப்புடன் மிளிர்கின்றது. தவஞானச் செல்வர்களும், சிவஞானச் செம்மல்களும் இந்நாட்டின்கண் வழிவழி வாழ்ந்து வருவதால் சிறப்பிற்கு எந்நாளுமே குறைவில்லை. இத் தகைமைசான்ற தமிழகத்தில் தெய்வக்கலைக் களஞ்சியங்களான தென்னாட்டுப் பதினெண்ணாதீனங்களுள் ஒன்றாகச் சிறப்புற்று விளங்குவது தருமபுர ஆதீனம். இவ்வெழில்மிகு ஆதீனத்தைப் பதினாறும் நூற்றாண்டில் நிறுவியவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளாவார்கள். இவர்களது குருபூசைத் திருநாள், தருமபுர ஆதீனத்திலும் அதைச்சார்ந்த ஸ்தாபனங்களிலும், ஆண்டுதோறும் வைகாசி மாதம் அபர பக்கத்துச் சப்தமி திதியில் மிக்க சிறப்புடன் கொண்டாடப் பெற்றுவருகிறது. இவ்வாண்டுக் குருபூசை நாளையதினம், 7—6—1958ல், கொண்டாடப்பெறும். இதை ஒட்டிப் பத்து நாட்களாகச் சிறந்த முறையில் மகோற்சவமும் மகாநாடும் நடைபெற்றுவருகின்றன.

---

* இது சென்னை வானொலி நிலயத்தில் 6—6—58இல்ஒலிபரப்பப் பெற்றது. நிலயத்தாரின் இசைவுபெற்று வெளியிடப்பெறுகிறது.

இனி, அவர்களது வரலாற்றைக் காண்போம். சேர சோழ பாண்டியர்களால் செங்கோலோச்சிய சிறப்புடையது செந்தமிழ் நாடு. மூன்று நாடுகளும் பல துறையிலும் சிறப்புற்றிருந்தன. ஆயினும், திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளும், குன்றம் எறிந்த குமரவேளும், உம்பர்கள் போற்றிடும் அங்கயற்கண்ணியம்மையும் அருளாட்சி புரிந்த மேன்மையுடையது பாண்டி நன்னடு. மேலும் சங்கம் அமைத்துத் தேய்வத் தமிழைச் சிறப்புறப் போற்றியது தேன் பாண்டிநாடு. அப் பாண்டி நாட்டில் சிவம் பேருக்கும் தவமுடையது ஸ்ரீ வில்லிபுத்தூர். இவ்வருமைத் தலத்திலே "தாளாற்றித் தந்த போருளேல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் போருட்டு" என்ற வள்ளுவர் வாய் மோழிக்கிணங்கக் கார்காத்த வேளாளர் குலத்திலே சுப்பிர மணியப் பிள்ளை என்பவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு, தற்காத்துத் தற்கோண்டாற்பேணித் தகைசான்ற சோற்காத்துச் சோர்விலாள் பேண் என்ற மறைமோழிக்கு இலக்கியமாய் நின்ற மீனுட்சி அம்மையார் வாழ்க்கைத் துணைவியானுர். இவ்விருவரும் இல்லறம் என்னும் நல்லறத்தை இனிதே நடத்தினர். எல்லா நலன்களும் ஈண்டி இருந்தும் மகப்பேறு இல்லாத குறை அவர்களது உள்ளத்தை நலிவு செய்தது. சிவஞானம் பேருக்கும் தவஞானச் சேல்வராக ஒரு மகவை எங்கள்பால் அருளவேண்டும்" எனத் தங்களது ஆன்மார்த்த மூர்த்தியான ஸ்ரீ சோக்கலிங்கப் பேருமானை வேண்டித் தவங்கிடந்தனர். நாளும் மலரிட்டு வழிபட்டு வணங்கினர். தோத்திரங்கள் பல சோல்லித் துதித்தனர். வேண்டுவார் வேண்டுவதே ஈவானுகிய சோக்கேசர் திருவருளால் அவ்விருவருக்கும் ஓர் ஆண் மகவு உதித்தது. உதித்த நாளோ சிவபரம்போருளுக்கு உகந்த சோமவார நன்னுள்.

பேற்றேூர்கள்; தமது அருமை மைந்தனைப் பாராட்டிச் சீராட்டிப் பால் நினைந்தூட்டி வளர்த்தனர். நாளும் இன்னிசையால் தேய்வத்தமிழ் பரப்பிய திருஞான சம்பந்தரைப்போல இப்பாலகரும் சிவம்பேருக்க வேண்டும் என்ற எண்ணம் தாய் தந்தையர்கட்கு இருந்தமையால் பிள்ளைக்கு ஞானசம்பந்தம் எனப் பேயரிட்டனர். விளையும் பயிர் முளையிலேயே தேரியும் அல்லவா ? குழந்தை ஞானசம்பந்தர் முகத்தில் சிவஞான ஒளி தவழ்ந்தது. குழந்தையைக் காணவந்தவர்கள், கண்ணுதலான் தந்த கருணை வேள்ளம் அல்லவா இக்குழந்தை எனப் போற்றி

மகிழ்ந்தனர். ஐந்து வயதளவில் கலை பயிலத் தொடக்கு வித்தனர். கயிலைப் பெருமான் கருணைப் பெருக்கால் ஞானசம் பந்தர் கலைஞானம் யாவும் கல்லாமலே கைவரப்பெற்றார். இது கண்ட பெற்றோர் பெருமகிழ்ச்சியுற்றனர். திருவருளை வியந் தனர். தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானைத் தரிசிக்க எண்ணினர். ஞானப்புதல்வர் ஞானசம் பந்தரையும் அழைத்துக்கொண்டு அங்கயற்கண்ணி தன்னோடும் அமர்ந்த ஆலவாய்ப் பதியை அடைந்தனர்.

கோபுர தரிசனம் செய்தனர். திரு வீதியை வலம் வந்தனர். பொற்றாமரைத் தடாகம் படிந்தனர். புலவர் திலகமாக-குதிரைச் சேவகனாக - வந்தியம்மையின் கூலியாளாக வந்து வழியடிமை கொள்ளும் வள்ளற் பெருமானையும், மலையத்துவசன் பெற்ற பெருவாழ்வாக - பிறவிப் பிணிக்கு மருந்தாக - தீந்தமிழின் சுவையாக - தொழும்பர் உள்ளக் கோயிற்கு ஏற்றும் விளக்காக - தோன்றாத் துணைக்கோர் துணையாகத் துலங்கும் மீனாட்சி அம்மை யையும் பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபட்டனர். சிலநாள் அப்பதியில் தங்கியிருந்தனர். எழுதரு மறைகள் தேரா இறைவனை எல்லிற் கங்குற்பொழுது அறு காலத்தும் போற்றிப் பரவினர். அப்பொழுது நகரத்தின் சிறப்பு, மங்கையர்க் கரசியார் மாண்பு, குலச்சிறையார் குணப்பண்பு, திருஞானசம் பந்தர்பால் வெளிப்பட்ட திருவருட் செயல் முதலியன ஞான சம்பந்தர் உள்ளத்தில் இடம்பெற்றன. ஆண்டவனிடத்து ஆராக் காதல் கொண்டார். அவருள்ளத்தில் அருள் ஒளி பொங்கி எழுந்தது. எல்லாப் பிறவிகளிலும் தொடர்ந்து நிற்கும் தாய் தந்தையாகிய அம்மை அப்பரை விட்டுப் பிரிய மனம் இல்லாத வரானார். இவரது பெற்றோர் ஸ்ரீ வில்லிபுத்தூர் செல்லும் எண்ணத்தினராய்ப் பிள்ளை ஞானசம்பந்தரை அழைத்தனர். அப் பொழுது, ஞானசம்பந்தர் சொக்கேசன் திருவருட்கு ஆளாயின படியால், தமக்கும் பெற்றோர்க்கும் உள்ள தொடர்பு உடல் தொடர்பே என்பதையும், ஆண்டவனுக்கும் தமக்கும் உள்ள தொடர்பு உயிர்த்தொடர்பு என்பதையும் விளக்கித் தமது சிந்தை சிவத்தினை நாடி நிற்பதையும் கூறிப் பெற்றோர் ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குச் செல்ல விடையளித்தார். பெற்ற மனம் பித்து அல்லவா? எப்படியும் மகவை அழைத்துச் செல்ல எண்ணினர். எண்ணம் ஈடேறவில்லை. ஞானசம்பந்தர் வாழ்வில்

புது ஒளி கண்டனர். இக்குழந்தை ஆலவாய் அண்ணல் அருள் தர வந்ததல்லவா ? சிவம் பெருக்க வந்ததல்லவா ? அப் பணிக்கு என வேண்டிப் பெற்ற குழந்தையாயிற்றே; ஆதலால் அக்குழந்தை இப்பொழுது சிவப்பணியைச் சிரமேற்கொண்டது போலும், என்று எண்ணி மன அமைதி கொண்டு ஸ்ரீ வில்லிபுத் தூருக்குத் திரும்பினர்.

அதன் பின்னர், ஞானசம்பந்தர் நாள்தோறும் பெரும்புலர் காலை முழ்கிப் பித்தற்குப் பத்தராகி வழிபாடியற்றினர். இப்படி இருக்கும் நாட்களில் ஒருநாள் பொற்றாமரைத் தடாகத்தில் நீராடச்சென்ற இவர், தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியும், தாழ்வடமும், நாயகன் சேவடி தைவரு சிந்தையும், நைந்துருகிப் பாய்வதுபோல் அன்பு நீர் பொழி கண்ணும், பதிகச் செஞ்சொல் மேய செவ்வாயும் உடைய தொண்டர்கள் பொற்றாமரைக் கரையில் சிவலிங்கத் திருமேனி அமைத்துப் பூசனை புரிவதைக் கண்ணுற்றார். தாமும் அவ்வாறு பூசிக்க எண்ணினார். எண்ணிய எண்ணத்தை இறைவன் திருமுன்னர் விண்ணப்பம் செய்தார். அந்த நினைவோடு இருப்பிடம் சார்ந்தார். அன்றிரவு நித்திரை கொண்டார். கருத்தறிந்து முடிக்கும் கண்ணுதற் பரமன் ஞானசம்பந்தர் கனவின்கண் எழுந்தருளி "ஞான சம்பந்தா, நீ விரும்பியவண்ணம் நாம் சிவலிங்கத் திருமேனி கொண்டு பொற்றாமரைத் தடாகத்தின் ஈசான பாகத்தில் கங்கைக்குள் இருக்கிறோம். காலையில் அங்குச் சென்று கங்கைக்குள் முழ்கி நம்மை எடுத்துப் பூசிப்பாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினார். அஃதுணர்ந்தெழுந்த ஞானசம்பந்தர் செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைப் போற்றினார். காலைக்கடன் முடித்துப் பொற்றாமரைத் தடாகத்தில் நீராடினார். இறைவன் குறிப்பித்தபடியே ஈசான மூலையில் முழ்கித் தேடினார். திருமாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனைப் பேட்டகக் கோயிலொடும் திருக்கரத்தே மேவப் பெற்றார். கண்ணுக்கினிய பொருளாகித் தம் கரத்தில் வந்த சிவலிங்கத் திருமேனியைக் கண்குளிரக் கண்டார். ஆனந்த அருவி ஆருகப் பெருக அகங்குழைந்தார். சொக்கலிங்கப் பெருமான் சந்நிதி சேர்ந்தார். இவ்வற்புத நிகழ்ச்சியைப் பதினொரு கலித் துறைப் பாடல்களால் கசிந்துருகிப் பாடினார். அப் பாடல்களில் ஒன்றைக் காண்போம்.

"கண்ணுக் கினிய பொருளாகி யேஎன் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புத மேஎன்ன விஞ்சை யிதால்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே."

இவ்வண்ணம் பாடிய பிறகு இறைவனை நோக்கிக் கருத்தறிந்து முடிக்கும் கருணை வள்ளலே! தேவரீர் திருமேனி கிடைக்கப் பெற்றேன். பூசனை புரியும் முறையும் ஞானோபதேசமும் கிடைக்கப் பெற்றேனில்லை. அஃதிலாது எப்படித் தேவரீரைப் பூசிப்பேன். ஆசாரியன் இல்லாது எப்படி உண்மையை உணர்வேன். அருள் திருமேனி காட்டிய தேவரீர் ஆசாரியனையும் காட்டியருள்க என்று வேண்டினார். ஆலவாய்ச் சொக்கர் அன்றிரவு முன்போலவே கனவின்கண் எழுந்தருளி "ஞானசம்பந்தா! நமது உபதேச பரம்பரையில் வந்தவர் திருவாரூர் கமலைஞானப்பிரகாசர், அவரிடம் சென்று நீ விரும்பிய உபதேசத்தைப் பெற்று நம்மைப் பூசிப்பாயாக" என அருளினார். அவ்வாறே (திருவாரூர்) கமலைஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றிச் "சோமவாரத்தன்று, ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசஞ் செய்து சிவலிங்க பூசை எழுந்தருளப் பண்ணிக் கொடுக்க" என்று கட்டளையிட்டருளினார்.

துயிலுணர்ந்த ஞானசம்பந்தர் இறையருளைப் போற்றித் திருவருள் பணித்த வழியே திருவாரூர் செல்லத் தொடங்கினார். திருவானைக்கா முதலிய பல தலங்களையும் வழிபட்டுச் சோம வாரத்தன்று காலையில் சென்று திருவாரூர் சேர்ந்தார். கமலாலயத்தில் நீராடினார். 'இன்றுதானே குருநாதன் தரிசனம் கிடைக்கும் பொன்னாள். உபதேசம் கிடைக்கும் உயரிய நாள்' என எண்ணிவராய்த் திருவாரூர்ப் பூங்கோயிலை வலம் வந்தார். இவ்வாறே, சொக்கலிங்கப் பெருமான் ஆணைதாங்கி வரும் அருந்தவச் சீடர் கிடைக்கும் நன்னாளல்லவா இந்நாள் என்று எண்ணியவராய் ஞானப்பிரகாசரும் நித்திய வழிபாடுகளை முடித்துத் திருக்கோயிலுக்குச் சென்று சித்தீச்சரம் தட்சிணா மூர்த்தி சந்நிதானத்தில் சிவயோகத் தமர்ந்திருந்தார். அப்போது வலம் வருகின்ற ஞானசம்பந்தர் "ஈனமல இருள் நீக்கும் ஞானபானு" இவர்தாம் என்பதை உணர்ந்தார். காந்தங்கண்ட இரும்பேபோல் ஆசாரியன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். பாசம் அகன்றது. அருள் உணர்வு தலைப்பட்டது. அவ் அனுபவம் பாடலாக உருவெடுத்தது. அப்பாடலைக் காண்போம்.

"கண்டேன்இப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான்"

குரு என்றதன் பொருள். கு என்பது அறியாமை. ரு என்பது போக்குதல். எனவே அஞ்ஞானத்தை அகற்றி மெய் ஞானத்தை நல்குபவர் குரு எனப் பெறுவார். குரு தரிசனத்தால் உயிர்கள் அடையும் உயர்வைத் திருமூலர் அனுபவ மொழியாலும் விரிவாக அறியலாம். அப் பாடல் வருமாறு,

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே."

ஆசாரியனைக் கண்டு பரவசமுற்ற ஞானசம்பந்தர் பணிவோடு ஒரு பக்கத்தே ஒதுங்கி நின்றார். ஞானப்பிரகாச தேசிகர் அஞ்சேல் என்று அபய முத்திரை காட்டித் தட்சிணாமூர்த்தி சந்நிதியில் இருக்கப் பணித்துத் திருவருள் நோக்கம் செய்து ஞானதீட்சை புரிந்து, பூசையை எழுந்தருளப் பண்ணிக் கொடுத்தனர். ஞானசம்பந்தர் தமது குருநாதர் மீது 36 பாடல் கொண்ட பண்டாரக் கலித்துறை என்னும் ஞானப்பிரகாச மாலையை இயற்றித் துதித்தனர். தமது ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் மீது 94 பாடல் கொண்ட சொக்கநாத வெண்பா என்னும் நூலை யியற்றிப் போற்றினர். அந் நூலின்கண் உள்ள ஒரு வெண்பாவைக் காண்போம்.

"பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன்—பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டிஇன்பத்தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா."

இவ்வாறு பலநாள் இறைவழிபாடும், குருவழிபாடும் இயற்றி இனிதிருக்கும் நாளில் வழக்கம்போல் ஒருநாள் ஞானப்பிரகாசர் புண்ணியச் சீடர்கள் புடைசூழத் திருக்கோயிலுக்கு எழுந்தருளி வழிபாடியற்றி அர்த்தஜாமம் ஆகும்வரையில் சித்தீச்சரம் தட்சிணா மூர்த்தி சந்நிதியில் சிவயோகத்தமர்ந்திருந்தார். அர்த்தயாம

தரிசனம் முடித்து வீட்டிற்கு எழுந்தருள்கையில் கைவிளக்குப் பணிவிடைக்காரன் உறங்கிவிட்டான். ஞானசம்பந்தர் தமக்கு இப் பணி கிடைத்ததே என்ற பேருவிருப்போடு கைவிளக்கைத் தாமே எடுத்து உடன் போந்தார். ஞானப்பிரகாசர் குமரகோவில் தெருவிலுள்ள தமது திருமாளிகைக்கு எழுந்தருளினுர். உள்ளே செல்கின்ற ஞானப்பிரகாசர் தமது சீடர்களைப் பார்த்து நிற்க எனப் பணித்துச் சென்றுர். எல்லோரும் இருக்கைக்கு ஏகினர். தீவிரதர நிலையிலுள்ள ஞானசம்பந்தரோ, நிற்க என்பதுதானே குரு ஆணை? எனவே குருநாதரால் நிலைநிறுத்தப்பெற்ற தியான சமாதியில் நிற்பதே முறை என்று எண்ணியவராய் அந்நிலையே நின்றுர். அன்றிரவு பெருமழை பெய்தது. பெய்தும் ஞானசம்பந்தர் மீது ஒரு துளிகூடப் படவில்லை. அவர் நின்ற மூன்றடி சதுர இடமும் மழையால் நனையவில்லை. கை விளக்கோ சுடர் விட்டெரிந்தது. விடியலில் சாணம் தெளிக்கவந்த குருபத்தினியார் குருஞானசம்பந்தரின் அருட்செயலைக் கண்டு வியந்தார். உள்ளே சென்று தமது கணவனுருக்கு உணர்த்தினுர். வெளியில் வந்து பார்த்த ஞானப்பிரகாசர் ஞானசம்பந்தரது அதி தீவிர நிலையைக்கண்டு அப்பனே உன்னுல் பல உயிர்கள் ஈடேற வேண்டும் என்பது ஆண்டவன் திருவுள்ளம். நீ குருநாதனுகும் தகுதி பெற்றுய். ஆதலால் இத்தலத்திற்கு ஈசான திக்கில் உள்ள மாயூரத்திற்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ளதும், அகத்திய முனிவரால் பூசிக்கப் பெற்றதும், திருக் கடவூரில் மார்க்கண்டேயர்க்காக உதையுண்டு நிக்ரகம் பெற்ற எமதர்மன் பூசித்துப் பேறு பெற்றதால் தருமபுரம் என வழங்கப் பெறுவதும், வில்வமரம் நிறைந்துள்ளதால் வில்வாரண்ய க்ஷேத்திரம் எனப் போற்றப்பெறுவதுமான தருமபுரத்தில் அமர்ந்து உபதேச வாயிலாக உண்மை நெறியைப் பரப்புக என ஆணை தந்தார். இதுமுதல், ஞானசம்பந்தர் குருஞானசம்பந்தரானுர். மேலும் ஞானப்பிரகாசர், 'சைவ சித்தாந்தச் செந்நெறியை நாடெங்கணும் பரவச்செய்க' என ஆணை தந்தார்.

அது கேட்ட குருஞானசம்பந்தர் மனம் பதைத்தார்; நடுங்கினுர். பிரிவின் பெருந்துயரெண்ணிப் "பிரிவற்றிருக்க வைப்பாய் எனையாண்டருள் பிஞ்ஞகனே" என வேண்டினுர். ஞானப்பிரகாசர், குருவாரந் தோறும் நம்மை வந்து தரிசிக்க எனக் கட்டளை யிட்டமையாலும், "தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்" என்பது அநுபூதியாகலானும், ஒருவாறு தேறினுர்.

ஆட்கொண்ட அன்றே என்றன் ஆவியும், உடலும், உடைமை எல்லாமும் குருநாதனைச் சேர்ந்து விட்டமையால் அதுமுதல் எனக்கென்று ஒரு சுதந்திரமும் இல்லை. நான் ஆசாரியனின் உடைமைப்பொருள். உடையவன் விருப்பம்போல் இயங்கு பவன்தானே நான் என்பதை அனுபவத்திற்கண்டார். ஆசாரியன் ஆணையை மேற்கொண்டார். இவ்வனுபவம் ஒரு பாடலாக வெளிவந்தது. அப்பாடலைக் காண்போம் :-

கனக்கும் போதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சையோஇணங் கார்புரத்தைச்
சினக்கும் கமலையுள் ஞானப்ர காச சிதம்பர இன்(று)
உனக்கிச்சை எப்படி அப்படி யாக உரைத்தருளே.

இனி இப்பாடற்கருத்தைக் காணலாம். சுமை போதிந்த பொருள் எருது, எஜமானன் என மூன்று பொருள்களை இதில் காண்கிறோம். அவற்றுள் சுமைப்போதி, அறிவற்ற ஜடப் பொருள். எருது அறிவுள்ளதாயினும் தன்னிச்சைப்படி நடக்க இயலாதது. இவ்விரண்டையும் தன்மை அறிந்து செலுத்துபவன் எஜமானன். அதுபோல் என்னுயிர் எருது. என் உடல் கனக்கும் போதி, தேவரீர், எஜமானன். கனக்கும் போதியான உடலை எருதுபோல் தூக்கிச் சுமக்கின்றது என் உயிர். சுமைப் பொருளாக உள்ளது என் உடல். உடலின் சுமையைக் கூட்டவோ குறைக்கவோ இந்தக் காலத்தில்தான் சுமப்பேன் என்று சொல்லவோ உயிராகிய என்னால் இயலாது. சுமையோ அறிவற்றது, ஆகையால் இந்த உயிருக்கு இவ்வளவு சுமை தான் இருக்கவேண்டும் இன்ன காலத்தில்தான் இருக்கவேண்டு மென்பதை அச்சுமை அறியாது. இரண்டையும் இயன்ற பெற்றி அறிந்து அமைப்பவர் குருவாம் திருமேனி தாங்கியருளிய தேவரீரே யாவீர். ஆகவே தேவரீர் இச்சைப்படியே செய்வேன் என இட்டபணியைச் சிரமேற் கொண்டார்.

இம்மாதிரி அனுபவம் மாணிக்கவாசகர் வாழ்விலும் சிறந்து விளங்கியதைக்காண்கிறோம். திருப்பெருந்துறையில்குருவாந்திரு மேனி காட்டி மாணிக்கவாசகரை ஆட்கொண்டான் இறைவன், ஆட்கொண்ட பிறகு பாண்டிமன்னன் ஆணையால் தண்டனைக்கு உள்ளானார் மணிவாசகர். தண்டனை அனுபவத்தை நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே என

நயம்பட நவின்றார். குன்றேயனைய இறைவன் என்னை ஆட் கொண்ட அன்றே யான் அவன் உடைமையாயினேன். உடை மைக்கு வரும் நன்மைதீமைகள் உடையவனுக்கே அன்றி உடை மைக்கு ஏது ? என்பது அவ்வனுபவ நயமாகும். அவ் வனுபவ நயம் காணும் பாடல் வருமாறு.

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூறெனக் குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே.

இவ்வனுபவம் கைவந்த குருஞானசம்பந்தர் ஆசான் ஆணை தாங்கித் தருமபுரம் சார்ந்தார். பல ஆன்மாக்களுக்கு உபதேச வாயிலாக உண்மை உணர்த்தினார். தமது சிவானுபவங்களை எல்லாம் அவ்வப்போது பாடல்களின் வாயிலாக வெளியிட்டார். அவை சிவபோகசாரம், திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் முதலிய நூல்களாக அமைந்துள்ளன.

குருஞானசம்பந்தர் இவ்வாறு ஞானாசாரியராக எழுந்தருளி இருக்கும் காலத்துச் சிதம்பரத்தில் கண்கட்டி மறைஞான பண்டாரம் என்பவர் சிறந்த கல்விமானாக விளங்கி வந்தார். கலைஞானம் கைவரப் பெற்ற அவர் மெய்ஞ்ஞானம் கைவரப் பெறாமையால் ஆன்மாவிற்கே இயற்கையாக ஆனந்தம் உண்டு என்றும், அது மலத்தால் தடைப்பட்டிருக்கிறதென்றும், தடை நீங்குகிறபோது ஆன்மா தன் ஆனந்தத்தை நுகர்கிறது என்றும், பரம்பொருளை ஒப்ப ஆன்மாவும் சச்சிதானந்த சொரூபி என்றும், தடை நீங்கியநிலைதான் முத்திநிலைஎன்றும், கூறிமுத்திநிலை என்ற நூலும் இயற்றினார். கல்வி வன்மையால் பலரையும் கவர்ந்தார். உயிர்கட்கு உண்மை உணர்த்த எண்ணிய குருஞானசம்பந்தர் கடவுள், உயிர், உலகம் என்ற முப்பொருள்களும் ஒன்றால் ஒன்று தோற்றுவிக்கப் பெறாமல் என்றும் உள்ள பொருள்கள் என்பதையும், மூன்றும் என்றும் உள்ளனவே ஆயினும் வெவ்வேறு தகுதியுடையன என்பதையும், அவற்றுள் இறைவன் சூரியனைப் போன்றவன், உயிர்கள் கண்களைப் போன்றன, உலகம் இருளைப்போன்றது என்பதையும் சூரிய ஒளி உணர்த் தினாலன்றிக் கண்கள் எந்தப் பொருளையும் காணாதவாறுபோல் இறைவன் உணர்த்தினாலன்றி உயிர்கள் ஒரு பொருளையும்

உணரா என்பதையும் இறையருளால் பேரின்பம் பெறத்தக்கது உயிர் என்பதையும், சூரிய ஒளியில் சந்திரன் ஒளி அடங்கி நிற்றல் போல் இறைவன் திருவடி ஒளியில் கலந்து தான் வேறு என வெளிப்படாது நிற்றலே முத்தி என்பதையும் விளக்கி முத்தி நிச்சயம் என்ற நூலை அருளிச் செய்து சித்தாந்த முத்தியை உறுதிப்படுத்தினர்.

இவ்வாறு பல்லாண்டுகள் அரன்பணியாற்றிய குருஞான சம்பந்தர் ஆனந்தபரவசர், சச்சிதானந்தர், மருதூர் ஆபதுத் தாரணர் முதலிய பல சீடர்கட்குச் சிவஞானேபதேசம் செய்து சித்தாந்த சைவ பரிபாலனம் செய்து வந்தார். வருங்காலையில் சிவயோக சமாதியில் எழுந்தருளத் திருவுளம் கொண்டார். தமது சீடர்களில் அதி தீவிர பக்குவியாகிய ஆனந்தபரவசரை ஞானபீடத்து எழுந்தருளச் செய்து தாம் விரும்பிய வண்ணம் சிவலிங்கத் திருவுருவின் அடியில் சமாதி நிலைகூடினர். ஆனந்தபரவசர் தீவிரதர பக்குவியாய் இருந்தமையால் குரு மூர்த்தியின் திருக் கோவிலுக்கு மேல்பால் சிவயோக சமாதி கூடிவிட்டார். உடனிருந்த திருக்கூட்டத்து அடியவர்கள் குருஞானசம்பந்தரது சந்நிதியைக் சேர்ந்து தங்கட்கு என்றும் உடனிருந்து உண்மை உணர்த்தக் குருநாதன் இல்லாதிருப்பதை மனம் உருகி தெரிவித்தனர். குறை நேர்ந்து வேண்டினர். திருச்செவி மடுத்த குருமூர்த்திகள் அவிச்சின்ன சத்சம்பிரதாயம் உலகில் நீடு வாழ எண்ணிச் சிவ சமாதியினின்றும் வெளிவந்து சச்சிதானந்தருக்கு ஞானதீக்ஷை புரிந்து அபிஷேகம் செய் வித்துச் சொக்கநாத பூஜையையும் கொடுத்தருளினர்கள். அவ்வாறு செய்தும் சச்சிதானந்தருக்கு ஞானசமாதி கூடி வர வில்லை. அதுகண்ட குருமூர்த்திகள் திருவருள் நோக்கம் செய்து ஆனந்தபரவசனைக் கண்டும் கண்டும் அந்தந்தோ பரகதியை அறிந்தீர் இல்லை என ஆனந்தபரவசரின் அதிதீவிர நிலையைச் சுட்டிக் காட்டி ஞான அனுபூதி கைகூடச் செய்தார். அவ்வமயம் அருளிய பாடலை நோக்குவோம்.

" தானந்தம் ஆதிநடு இல்லாதோங்கும்
சச்சிதானந்தமயம் தானேயாய
ஆனந்த பரவசனைக் கண்டும் கண்டும்
அந்தந்தோ பரகதியை அறிந்தீர் இல்லை

மானந்தான் வடிவாகி நிற்றலாலோ
மலமாயை கன்மம் இவை மடியாதாலோ
ஞானந்தான் உமதுளத்தில் உதியாதாலோ
நாமறியோம் உமதுமயல் நவிற்றுவீரே ''

ஞானசமாதி கைவரப் பெற்ற சச்சிதானந்தரைக் கண்டு அக மகிழ்ந்த குருமூர்த்திகள் சோக்கலிங்கப் பெருமானைப் பூசித்துப் பக்குவிகட்குச் சிவஞான உபதேசம் செய்துவருவீராக எனச் சச்சிதானந்தருக்குக் கட்டளை இட்டருளி வைகாசிமாதம் அபர பக்கத்துச் சப்தமி திதியில் சிவ சமாதி கூடினார்கள். இவ்வாறு சிவாநந்தப் பெருவாழ்வு பெற்ற திருநாளைத்தான் குருபூஜைத் திருநாளாகத் தருமபுர ஆதீனத்தில் நாளைய தினம் 7—6—58 வெகு சிறப்பாகக் கோண்டாட இருக்கின்றது. இது ஆண்டு தோறும் பத்து நாள்விழாவாகக் கோண்டாடப்பெறுகின்றது.

ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளால் தோற்றுவிக்கப்பெற்ற இத் தருமபுரஆதீனம் அன்றுமுதல் இன்று வரை 400 ஆண்டுகளாகத் தமிழ்த்தோண்டும், சமயத்தோண்டும், சைவசித்தாந்த சாத்திரத்தோண்டும், சமூகத்தோண்டும் ஒல்லும் வகையெலாம் செய்து வருகின்றது. இவ் வாதீனத்தில் இப்போழுது குருமூர்த்திகளாக வீற்றிருந்து ஞான அரசு புரிப வர்கள், 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளாவார்கள். இவர் களது அருளாட்சியில் தேவாலயங்கள் சிறப்புறுகின்றன. வழிபாடு வளம்பெறுகிறது. சமயப் பிரசாரம் தழைத்தோங்கு கின்றது.

மேலும் குருஞானசம்பந்தர் சமாதிநிலையெய்திய திருக்கோயில் சிறப்புக்களில் சிலவற்றைக்காண்போம். ஸ்ரீ குருஞானசம்பந்தர் சமாதி கூடிய இடம் சமாதிஸ்தானமாக இல்லாமல் சகல பரிவாரங்களுடன் கூடிய திருக்கோயிலாகத் திகழ்கின்றது. அங்குக் குருமூர்த்திகள் ஸ்ரீ ஞானம்பிகை சமேத ஸ்ரீ ஞானபுரீஸ் வரர் என்ற திருநாமத்தோடு காட்சி வழங்குகிறார். கருத்தறிந்து முடிக்கும் கண்கண்ட தெய்வமாக விளங்குகிறார். குருபூஜையை ஒட்டிப் பத்து நாட்களில் ஆண்டுதோறும் வெகு சிறப்பாக மகோற்சவம் நடைபெறுகிறது.

மற்றும் இவ்வாதீனத்தில் ஏழாவது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்தவர்கள் ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளாவார்கள். இவர்கள் காலத்தில் அதாவது 200 ஆண்டுகட்குமுன்னர்த் தஞ்சை மன்னன் கடலாடவிரும்பிக் காவிரிப்பூம்பட்டினத்துக்குப் பரிவாரங்களுடன் சென்முன். செல்லும்வழியிலுள்ள தருமபுரத்தை அணுகினுன். அப்போழுது ஸ்ரீ ஞானபுரீஸ்வரர் ஆலயத்தில் அர்த்த யாம பூஜை நடந்தது. மணி ஓசை கேட்ட மன்னன் ஊர்தியிலிருந்து இறங்கிப் பரம்போருளை மனத்தினுல் தியானித்து வணங்கினுன். அப்போழுது உடனிருந்த சிலர் தாங்கள் சூத்திர சமாதியை வணங்கியதால் பாவத்திற்கு உள்ளானீர்கள். அதனுல் பிராயச்சித்தம் செய்து கோள்ளவேண்டும். மேலும் பிறர் இக்குற்றத்திற்கு ஆளாகாதவாறு இக்கோயிலை இடித்துவிட வேண்டும் என்றனா. அரசனும் அதற்கு இணங்கி ஏவலரை நோக்கி இடிக்கும்படி கட்டளையிட்டு மேற்சேல்லலாயினுன். ஏவலாளர் ஆலயத்தை இடித்தனர். அதுகண்ட திருக்கூட்டத்து அடியவர்கள் குருமூர்த்தியாகிய திருவம்பல தேசிகரிடம் தேரிவித்தனர். குருமூர்த்திகள்,

'ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததேன்று மோழியலாம் — ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தான் ஆனுல்
நோக்குவதேன் யாம் பிறரை நோந்து.'

என்று பதைப்புடன் நின்ற அடியவர்கட்கு ஆறுதல் கூறி அருளினுர். எம்பெருமானும் தமது சிலம்போலியினைக் கேட்பித்துத் திருவருள் சுரந்தனர். அவ்வோலியினைக்கேட்ட குருமூர்த்திகள் இறைவன் திருவருளைவியந்து ஸ்ரீ குருஞானசம்பந்தர் சந்நிதியில் நின்று,

'தேசம் சிவாலயங்கள் சேர அலையவோரு
மோசம் வந்த தையோ முதல்வனே — தேசத்து
மன்னைவேறுப் பேனே வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவேறுப் பேனே உரை.'

என விண்ணப்பித்து பஞ்சாக்கரம் சேபித்தனர். ஏவலர்களுடைய இரும்புக்கோல் படும் இடந்தோறும் இரத்தம் பெருகிற்று. ஏவலர் மயங்கி வீழ்ந்தனர். காவிரிப்பூம்பட்டினம் நோக்கிச் சென்றுகோண்டிருந்த மன்னனுக்குக் கண்ணொளி மறைந்தது.

மன்னன் தருமபுரம் திரும்பினான். குருமூர்த்திகளை வணங்கிப் பிழை பொறுக்க வேண்டினான. குருமூர்த்திகள் தமது குரு முதல்வராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தரை நினைந்து மன்னனுக்கும் ஏவலர்களுக்கும் திருநீறு அளித்தார்கள். எல்லோரும் நலம் அடைந்தனர். பிறகு மன்னன் காவிரிப்பூம்பட்டினம் சென்று கடலாடினான். மீண்டும் தருமபுரம் வந்து அண்மையில் பாடி வீடமைத்து ஒரு மண்டலம் தங்கிக் குரு தரிசனமும் சொக்க நாதர் தரிசனமும் செய்து நலம் பெற்றான். இம் மன்னன் பரிவாரங்களுடன் பாடி வீடமைத்துத் த்ங்கியிருந்த இடம் இப் பொழுது மன்னன்பந்தல் என வழங்குகிறது. தஞ்சை மன்னன் தான் அர்த்தயாம பூஜை தரிசனத்தால் ஆட்பட்டமையால் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருக்கோயில் அர்த்தயாம பூஜை நடைபெறுவதற்கு வேண்டிய சில நிலங்களைக் காணிக்கையாக அளித்து விடைபெற்றுச் சென்றான்.

இவ் குருமூர்த்திகள் சிவபோகசாரம், சொக்கநாத வெண்பா, முத்தி நிச்சயம், திரிபதார்த்தருபாதி தசகாரிய அகவல், சோடச கலா ப்ராசாத ஷட்கம், சொக்கநாதர் கலித்துறை, ஞானப்பிரகாச மாலை, நவரத்தின மாலை என்ற எட்டு இனிய நூல்களை அருளிச் செய்துள்ளார்கள். இந் நூல்கள் யாவும் சொற்சுவை பொருட்சுவை மிக்கனவாய், சைவசித்தாந்தக் கருத்துக்களை எளிய நடையில் விளக்குவனவாய் அமைந் துள்ளன. இந்நூல் தொகுதி பண்டார சாத்திரம் என வழங்கப் பெறும். பொருள் இருக்கும் இடம் பண்டாரம் என வழங்கப் பெறும். உதாரணமாக நெற்பண்டாரம் பொற்பண்டாரம் என்பவற்றைக் காணலாம். அதுபோல ஞானசாத்திரத்தைத் தன்னகத்தே கொண்டுள்ளமையால் இந்நூல் தொகுதி பண்டார சாத்திரம் எனப் பகரப் பெறுகின்றது.

இனி இவர்களது காலத்தைக் காண்போம். குருஞான சம்பந்தர்க்குக் குருவாகிய கமலை ஞானப்பிரகாசரைப் பற்றிய, சதாசிவதேவ மகாராயர் காலத்தில் அவர் பிரதிநிதியாகத் தஞ்சையை யாண்ட கிருஷ்ணதேவராயர் பெண்வயிற்றுப் பேரனான கிருஷ்ணமகாராசையன் ஆணைப்படி வெட்டுவித்த கல்வெட்டொன்றில் சிக்கல் வடகுடி ஓடாச்சேரி முதலான

தேவஸ்தானங்களுக்குத் திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தைக் கணக்கு எழுத்தும் பரதேசி முத்திரையும் அடைத்துக் கொள்ளும் படிக்கு உத்தரமளிக்கிறது எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இச்சாசன காலம் கி. பி. 1561. அன்றியும் கமலை ஞானப்பிரகாசர் இயற்றிய மழுவாடிப்புராணத்துச் செய்யுளாகிய இது,

தழுவிய கலியு கஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்
றுழிதரு மெண்பத் தேழாண் டொழிந்தபின் குரோதனுண்டில்
மொழிதரு மாசித் திங்கள் முற்பக்க முதனு டன்னின்
மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் தமிழி னுலே.

சாலிவாகன சகாப்தம் 1488 என்று தெரிவிக்கிறது. இவ்விரண்டு ஆதாரங்களும் ஞானசம்பந்தர் காலம் 395 ஆண்டுகட்குமுன்னர் என்று துணிய இடந் தருகின்றன.

கயிலாய பரம்பரையிற் சிவஞான சித்திநெறி
காட்டும் வெண்ணெய்ப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றருமை வாழ்ஞான சம்பந்தக்
குரவன் மேலாஞ்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ.



---

## EXTRACT FROM THE VISITOR'S BOOK

The Velur Sri Vaithinathaswamy Devasthanam,
Vaithiswarankoil

I have had the privilege of visiting this very ancient temple which is being maintained in a very healthy condition. May God bless us all.

(Sd.) K. Vinayagam, M. L. A.,
Madras.

(True copy)

# திருவியமகத் தேவாரக் குறிப்புரை

தருமை ஆதீனப் புலவர்,

**வித்துவான், திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள்**

தமிழாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.

(மலர் 17, இதழ் 6, பக்கம் 418 இன் தொடர்ச்சி)

நக்கமேகுவர் நாடுமோ ரூருமே
    நாதன்மேனியின் மாசுண மூருமே
தக்கபூமனைச் சுற்றக் கருளோடே
    தாரமுய்த்தது பாணற் கருளோடே
மிக்கதென்னவன் றேவிக் கணியையே
    மெல்லநல்கிய தொண்டர்க் கணியையே
அக்கினாமு துண்கல னோடுமே
    யாலவாயர னுமை யோடுமே. 6

அடி. 1. நக்கம் = வெற்றரை, நக்கமாய் நாடும் ஊரும் ஏகுவர் என்க. ஏனையது வெளிப்படை. அடி. 2. பூமனை = அழகிய திருக்கோயிலின்கண். சுற்ற = உடுத்துக்கொள்ள. கருள் = நல்லாடை. தாரம் = அரும்பண்டம். அவை, இருந்து பாடப் பொற்பலகை முதலியன. பாணர், திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்பதனைச் சேக்கிழார் திருமொழியால் உணர்க. அடி. 3. தென்னவன் தேவி = மங்கையர்க்கரசியார். அணி = மங்கலநாள். இதனை, '' பாண்டிமா தேவியார் தமது பொற்பிற் பயிலுநெடு மங்கலநாள் பாதுகாத்தும் '' (திருஞா. 705) என்று சேக்கிழார் அருளியவாற்றானுமுணர்க. அணி ஐ = அணிமையிலுள்ள தலைவன். அணியை என முன்னிலையாக வுரைப்பின் இயையாமையறிக. அடி. 4 அக்கின் ஆர் அமுது = சங்குமணி போல வெள்ளிதாகப் பொருந்திய உணவு. ஆலவாய் அரனார் உமையோடு உண்ணுங்கலம் ஓடு என்க.

வெய்யவன்பல் லுகுத்தது குட்டியே
    வெங்கண்மாசுணங் கையது குட்டியே
ஐயனேயன லாடிய மெய்யனே
    யன்பினால்நினை வார்க்கருண் மெய்யனே
வையமுய்யவன் றுண்டது காளமே
    வள்ளல்கையது மேவுகங் காளமே

ஐயமேற்ப துரைப்பது வீணையே
யாலவாயரன் கையது வீணையே. 7

அடி. 1. குட்டி = (1) தாக்கி, இஃது ஒரு மரபு வழுவமைதி (2) குருளை 'கையது மாசுணக் குட்டி' என்க. அடி 2. மெய்யன் = (1) திருமேனியை உடையவன். (2) மெய்ப் பொருளாயுள்ளவன். அடி. 3. காளம் = நஞ்சு. கங்காளம் = எலும்புக்கூடு. இது தோள்மேல் உள்ளதாகலின் 'கை' என்பதனை ஆகுபெயராகக் கொள்க. அடி. 4. ஏற்பது ஐயம்; உரைப்பது வீண் உரையை என்க, இங்கு 'வீண் உரை' என்றது, 'கறுத்ததை எவன்கொல் ஐயகந்தரம்' என வினவியினார்க்கு, கந்தரம் என்பதற்கு அவர் குறித்ததல்லாத வேறு பொருளைக் கற்பித்து, 'மாரிபெய்தற்கு' (திருவிளையாடற் புராணம் வளையல் விற்ற படலம்) என்றாற்போலப் பொருந்தா தீறுக்கும் விடை முதலியவற்றை. ஏனையது வெளிப்படை.

தோள்கள்பத்தோடு பத்து மயக்கியே
தொக்கதேவர் செருக்கை மயக்கியே
வாளரக்க னிலத்துக் களித்துமே
வந்தமால்வரை கண்டு களித்துமே
நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே
நின்விரற்றலை யான்மத மத்தனே
ஆளுமாதி முறித்தது மெய்கொலோ
வாலவாயர னுய்த்தது மெய்கொலோ. 8

அடி. 1. மயக்கி = (1) ஒருங்கு சேர்த்து. (2) செயலறப் பண்ணி. அடி. 2. களித்து = மகிழ்ச்சியின் மயங்கி உக ளித்து = துள்ளி. உன்மத்தன் என்புழி. அடி. 3. இரண்டா வது விரிக்க. மதமத்தன் = ஊமத்தம் பூவையணிந்தவன்; இறைவன். அடி. 4. ஆதி, அரன் என்பன விளி. மெய் = (1) உடம்பு. (2) மெய்ம்மை. கொல், ஓ என்பன ஈரிடத்தும் அசைநிலைகள்.

பங்கயத்துள நான்முகன் மாலொடே
பாதநீண்முடி நேடிட மாலொடே
துங்கநற்றழ லின்னுரு வாயுமே
தூயபாடல் பயின்றது வாயுமே

செங்கயற்கணி ஞரிடு பிச்சையே
சென்றுகொண்டுரை செய்வது பிச்சையே
அங்கியைத் திகழ்விப்ப திடக்கையே
யாலவா யரஞர திடக்கையே. 9

அடி. 1. மால் = (1) திருமால். (2) மயக்கம். அடி. 2. வெளிப்படை. அடி. 3. பிச்சை = (1) பிட்சை. (2) பித்தை என்பதன் மரூஉ. 'பித்து' என்பதற்குமேல் 'வீண்' என்ற தற்கு உரைத்தாங்குரைக்க. அடி. 4. இடக்கை = (1) இடப் புறத்தில் உள்ள கை. (2) இடமாகிய பகுதி, அரஞரது இடம் ஆலவாய் என்க. இனி இதனை ஒருவாச்சியம் (டக்கை) எனக் கொண்டு வலக்கையிலுள்ள தமருகத்தைக் குறித்ததென்ற லுமாம்.

தேரரோ டமணர்க்குநல் காணையே
தேவர்நாடோறுஞ் சேர்வது காணையே
கோரமட்டது புண்ட ரிகைத்தையே
கொண்டநீள்கழல் புண்ட ரிகத்தையே
நேரிலூர்க ளழித்தது நாகமே
நீள்சடைத் திகழ்கின்றது நாகமே
ஆரமாக வுகந்தது மென்பதே
யாலவாயர ஞரிட மென்பதே. 10

அடி. 1. 'நல்காணையே சேர்வது' என இயையும். கால் ணை = திருவடி அன்பு. இங்கு ஒரு உருபு விரித்துச் சேர்வது என மேலே முடிக்க. அன்றி ஐகாரத்தைச் சாரியையாக்கிக் கானின் கண் அட்டது என வருகின்ற அடியில் முடித்தலுமாம். அடி. 2. கோரம் அட்டது = கொடுமையாக அழித்தது. புண்டரிகம் = புலி. (2) தாமரை. இங்குப் புண்டரிகத்து ஐ (அழகினை) உடையதென்க. அடி. 3. நாகம் = (1) மலை (2) பாம்பு. அடி. 4. வெளிப்படை.

ஈனஞானிக டம்மொடு விரகனே
யேறுபல்பொருண் முத்தமிழ் விரகனே
ஆனகாழியுண் ஞானசம் பந்தனே
யாலவாயினின் மேயசம் பந்தனே
ஆனவானவர் வாயினு ளத்தனே
யன்பரானவர் வாயினு ளத்தனே

நானுரைத்தன செந்தமிழ் பத்துமே
வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. 11

அடி. 1. விரகன் = சூழ்ச்சியுடையவன் (1) (2) வல்லவன். 'ஈன ஞானிகள்' என்றது சமணர்களை. அடி. 2. சம்பந்தன் = திருஞானசம்பந்தர். (2) இறைவன், இப்பொருட்கு, சம்பு + அந்தன் எனப்பிரித்து அந்தன் என்பதற்கு அழகன், அந்தத்தைச் செய்பவன் என்றுரைக்க. அடி. 3. வானவர்வாயின் = வானவரிடத்து. உள் அத்தன் = கரந்து நிற்கும் கடவுள். அன்பரானவர் வாயினன் உளத்தினன் என்க. அடி. 4. தமிழ் = நீர்மை. நல்ல நீர்மை பத்து என்றது அடியார் செய்கைகளை. தரும் என ஒருசோல் வருவித்து முடிக்க. விரகனும், முத்தமிழ் விரகனும், ஞானசம்பந்தனுமாகிய நான், சம்பு அந்தனை, உள் அத்தனை, வாயினனை, உளத்தினனை உரைத்தனவாகிய செந்தமிழ் பத்தும் வல்லவர்க்கு இவை நல்லியல்பு பத்தையும் தரும் என முடிவு செய்க.

திருச்சிற்றம்பலம்

---

## EXTRACT FROM THE VISITOR'S BOOK

Sri Amirthakateswaraswamy Devasthanam,
Tirucadayur.

இன்று ஸ்ரீ அபிராமி அம்பாள் சமேத ஸ்ரீ அமிர்தகடேச்வரரைத் தரிசனம் செய்தது மகாபாக்கியம், பிறவி பேற்றதன் பயன் என்று கருதுகிறேன்.

குழந்தைகள் - பேண் குழந்தைகள் அதிகாலையில் தேவாரம் ஓதியது. அபிராமி அந்தாதி பாடியது; நாட்டின் ஆத்மீக மறு மலர்ச்சிக்கு அடையாளமாகும்.

எம்பெருமான் கருணை இந்த நாட்டின் மீது என்றும் இருப்பதாக.

(Sd.) ஒ. வி. அளகேசன்
21—5—1958.

# பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள்

**வித்துவான், திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்கள்**
ஆராய்ச்சி விரிவுரையாளர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்,
அண்ணுமலைநகர்.

(மலர் 17, இதழ் 5, பக்கம் 355 இன் தொடர்ச்சி)

"நாரை, நொந்ததன்றலையும் நோய்மிகும் துறை" (ஐங் 160) என்றது காண்க. இவ்வாறு பிள்ளை சேத்ததாலாய உளநோயும் பசிமிக்கதால் உடல் நோயும் மேலும் மேலும் வருத்தா நிற்கவும் அங்குத் தங்கியிருந்த நாரை, காலையும் நண்பகலும் அங்குத் தங்கியிருந்துவிட்டு மாலையில்தான் தன்னிருப்பிடத்திற்கு வந்து சேர்ந்ததாம். இதனை,

"காணிய சென்ற மடநடை நாரை
காலையிருந்து மாலை சேக்கும்
தெண்கடல் சேர்ப்பு" (ஐங். 157)

என்ற அடிகள் உணர்த்துதல் காண்க. இதுகாறுங் கூறிய நாரையின் செயல்கள் யாவும், ஆறறிவுடைய மக்கள் செயலினும் மாண்புடையதாய், வியப்பையும் நயப்பையும் தருதல் காண்க.

நல்லோர் வாழும் நன்னிலத்தில் உள்ள நாரைகள் சில அந்நல்லோர் சார்பினுல் அருள் உள்ளம் பெற்று விளங்குதலும் உண்டு; என்பதை நல்லந்துவனுர் நவின்றிருக்கின்றுர். உப்பங் கழியில் உள்ள மீனைக் கவர்ந்துண்டல்லது உயிர்வாழ முடியா தவை நாரைகள் என்பது யாருமறிந்த உண்மை. ஆயினும் தம்முடம்பு நிலைபெறப் பிறிதோன்றன் உயிரை அது நின்ற உடம்பினின்றும் நீக்கி அவ்வுடம்பை யுண்டு வாழ மனமில்லாத நாரைகள் - கோல்லா நோன்பை மேற்கோண்ட நாரைகள், எப்படி உயிர் வாழ்வது? மக்களுக்காயின், புலால் உணவின்றி யும் போருந்திய நல்லுணவுண்டு வாழ வழியுண்டு. மீன் முதலிய புலால் உணவையே யுண்டு வாழவேண்டிய நாரைகள், கோல்லா நோன்பையும், புலாலுண்ணு நோன்பையும் மேற் கோண்டு வழுவாது காக்கும் ஆற்றல் இல்லனவாயின,

அவற்றுள் சிறந்த அறம் ஒன்றைமட்டும் மேற்கொண்டு காக்கும் நோக்குமுடையவாய், “ ஒன்ருக நல்லது கொல்லாமை ” என்று வள்ளுவர் புகழ்ந்த கொல்லா நல்லறத்தை மட்டும் மேற்கொண்டு காக்கத் துணிந்தன. பசியும் நீங்க வேண்டும் ஒருயிரையுங் கொல்லல் ஆகாது என்ருல் நாரை, அவ்விரண்டையும் எவ்வாறு நிறைவேற்றல் இயலும்? என்று நமக்குத் தோன்றுகின்ற தன்றே? மிகத்திறமையாக நிறைவேற்றியுள்ளன அந்நாரைகள் காண்மின்.

> “ கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினம்
> திரையுறப் பொன்றிய புலவுமீ னல்லதை
> இரையுயிர் செகுத்துண் ணுத் துறை ” (கலி. 131)

என்பதை யூன்றி நோக்குக. “நீரின் தாக்குதலால் கரையை மெல்ல மெல்லக் கவர்கின்ற வளைந்த கழியின்கண், கண்கவர் வனப்புடைய நாரைகள் அலைகள் மோதுதலால் தாக்குண்டு இறந்த புலால் நாற்றமுடைய மீன்களையன்றித் தமக்கிரையாக மீனின் உயிரை நீக்கி அதன் உடலை யுண்ணுத உயர்வுடைய துறை” என்பது பொருள். அலைகளின் தாக்குதலுக்கு ஆற்ருது மோத்துண்டு இறந்த மீன்களை மட்டும் உண்டு வாழ் கின்றனவாம் அந்த நாரைகள். தாமே யிறந்து பட்டபின் அவற்றின் உடலை யுண்பதில் பாவமில்லை என்பது அந்நாரை களின் கொள்கை. இக்கொள்கை, புத்தமதக் கொள்கையாகும். புலாலுணவை யொழித்துப் பிறவுணவு உண்டு வாழும் மக்களே அத்தகைய நெறியைப் போற்றினர்கள் என்பதறியும்போது, புலாலுணவன்றிப் புசியாத நாரைகள், இவ்வாறு தாமே யிறந்து பட்ட உயிரின் உடம்புகளை மட்டும் உண்டு எவ்வுயிரையும் கொன்றுண்ணுது காத்த நோன்பு நனிசிறந்தது என்பது கூறவும் வேண்டுமோ?

மணிமேகலையில், நாகர்கள் தலைவனுகிய குருமகன், ‘எமக்காம் நல்லறம் இயம்புக’ என்று வேண்டச், சாதுவன் என்னும் வணிகர் பெருமகன் கூறிய அறநெறியையும், இந்நாரைகளின் நோன்பையும், இணைத்து நோக்கத்தகும்.

மக்களையே கொன்று தின்று பழகிய நாகர்கட்குச் சாதுவன் தக்காங்குக் கூறிய அறமாவது யாதெனின்? அது

"உன்றனக் கோல்லு நெறியற முரைக்கேன்
உடைகல மாக்கள் உயிருய்ந் தீங்குறின்
அடுதோழில் ஒழிந்தவர் ஆருயிர் ஓம்பி
மூத்துவிளி மாவோழித் தேவ்வுயிர் மாட்டுந்
தீத்திற மோழிகேனச் சிறுமக னுரைப்போன்
ஈங்கேமக் காகும் இவ்வறஞ் சேய்கேம்"

(மணிமேகலை 16. 113-118)

என்புழித் தேளிவுறக் காணப்படுகின்றது காண்மின். கப்பல் உடைந்தமையால் வருந்தி உயிர்தப்பி நாகர்வாழ் பகுதிக்குச் சேன்றவர்களை அந்நாகர் கோன்று தின்று வந்தனர் என்பதும், சாதுவன் அவ்வாறு வந்தவனுயினும் அவர் மோழி பயின்ற நல்லோன் ஆதலில் அவனைக் கோல்லாது விடுத்தார்கள் என்பதும், கலம் உடைந்தமையால் கடலில் ஆழ்ந்து போகாமல் உயிர்தப்பி வந்தவர்களைக் கோல்லுந் தோழிலை நீக்கி அவர் அரிய உயிரைப் பாதுகாக்க வேண்டும் என்று அந்நாகரைச் சாதுவன் வேண்டிக்கோண்டான் என்பதும், மூப்பினுல் இறந்துபட்ட விலங்குகளை மட்டும் உண்ணலாம் என நாகர்கட்குப் பசி நீக்கும் வழியைக் காட்டினுன் என்பதும் அந்நேறியைத் தமக்கேற்ற அறமாக மகிழ்ந்தேற்றுக் கோண்டார்கள் நாகர்கள் என்பதும் விளங்குதல் காண்க.

அலைகளால் தாக்குண்டு இறந்த மீன்களை மட்டும் உண்டு உயிருள்ள மீன்களைக் கோன்று தின்னுத நாரைகட்கும், மூத்து விளிமாவோழித்து எவ்வுயிரையும் கோன்று தின்னுத அறத்தை நன்றேன ஏற்றுக்கோண்ட நாகர்கட்கும், பேரிதும் ஒற்றுமையுண்மை காண்க. தான் மீன் உண்ணுமையே யன்றித் தன்னினமாகிய நாரைகளும் பிற பறவைகளும் போற்ருமரைக் குளத்துள்ள மீனையுண்டு பாவத்தில் வீழாவண்ணம் அப்போற்ருமரைப் போய்கையில் மீன்களே இல்லாமல் சேய்யவேண்டுமேன இறைவனிடம் வரம்பேற்ற (திருவிளையாடல்) நாரையின் பேருந் தன்மையும் ஈண்டு நினைக்கத்தகும்.

(தோடரும்.)



# ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனர் : : : : தோத்திரப்பா

புலவர், திரு. இராசமாணிக்கம் பிள்ளை அவர்கள்
புதுவை.

உண்மைநெறி யுந்தும் உயரத் துவிதசித்தித்
திண்கொடிசங் கற்பத்தால் சேர்ப்பிக்கும் — உண்மை நெஞ்சே
வேதப்ர காசம் விருவியருண்ம் மெய்ஞ்ஞான
போதக் களிற்றிருதாள் போற்று.

(இதில் பதிருன்கு சாத்திரங்களின் பெயர்கள் தோனிக்கும்)

முத்தொழிலைப் பெற்றிடலான் முப்பா லுலகுக்கோர்
சித்தன் நிமித்தனெனத் தேர்ந்துரைத்தாய் — பேத்த
நிலைநீக்கி யாளவந்தோய் நின்மலமெய் கண்டா
கலையாக மம்மியல்பிற் கற்று. 1

ஒன்ருய் உடன்வேருய் உள்ளான்; வினையளவால்
போன்றலுடன் தோற்றம் புரிகின்ருன்; — என்றீர்
சுவேத வனப்பெருமாள்! சொற்றேர்மெய் கண்டா
நிவேதனமென் ருவி நினக்கு. 2

மாயா இயந்திரத்துள் மன்ருன்மா உண்டேன்று
சாயாவே ழேதுக்கள் சாதித்தாய் — தாயாகி
வந்தெம்மை யாளவந்தோய்! வாழ்வெண்ணெய் மெய்கண்டா!
கந்தழியே சற்குருவே கா. 3

அந்தக் கரண மவற்றின்றேன் றன்றவைதாம்
சந்தீத்த தான்மாச் சகசமலத் — தோந்தத்தால்
உணரா தவத்தைந் துறுமென்மெய் கண்டா
உணரேன் எனக்குணர ஓது. 4

சிவசந் நிதிமுன்னர் சீவர்சீ விப்பர்
சிவனுயிர்க்குத் தோன்றுன்; துணையான்; — அவிகாரி
ஆமென்றுய் மெய்கண்டா! அச்சுதகளப்பாளர்
தாமென்சேய் தாரோ தவம். 5

அசத்தன்றும் சூனியமு மன்றுசிவ சத்தே
நிசத்ததெனச் செப்பினிரேன் நெஞ்சும் — வசத்ததுவாய்
விட்டதுவே மெய்கண்ட வித்தகா! நெக்கதுதான்
விட்டதேன்றன் பாச விலங்கு. 6

ஒன்ருேன்றை யுற்றறியா பாசம் பதியிரண்டும்
நின்றவுயிர் மற்றிரண்டை நேர்ந்தறியும் — என்றுரைத்தீர்
பெண்ணு கடத்தேலும்பை வாவென்ற பிள்ளையைப்போல்
பெண்ணு கடத்துதித்தோய் பேசு. 7

பொய்கண்ட புன்புலனுல் போதமிழந் தேய்த்தவேமைக்
கைகண்ட மானுடனுய்க் காசினியில் — மெய்கண்ட
தேசிகனுய் வந்தீர்! சிவஞான போதநல்கி
மாசிவபோ கத்தழுத்த மற்று. 8

ஊனக்கண் பாசம் உணராப் பதிப்பொருளை
ஞானக்கண் ணுலறிவில் நாடுகவே! — ஆனந்தம்!
எண்ணஞ் செழுத்தேன்றீர் மெய்கண்டா! மெய்காணும்
திண்ணம் எனக்குமருள் தேர்ந்து. 9

இறையிற் கலந்தங் கிறைபணியில் நிற்கச்
சிறைமலமா யாகன்மந் தீரும் - முறையினையே
மெய்கண்ட நாதா! வியன்வெண்ணெ நல்லூரா!
பொய்கண்ட வேற்குப் புகல். 10

நீர்காட்ட யான்கண்டு நீளன்பா லின்பவடி
சேர்வேனே சித்தாந்தச் செம்மலே! — சீர்நூல்
அருணந்திக் கோதியவா! அன்பார்மெய் கண்டா
இருணந்த எல்லே எழு. 11

மலங்கழீஇ யன்பர் மரீஇத்தளி வேடம்
இலங்குமர னென்ன இறைஞ்சிக் - கலங்காத
முத்தர்க்கா ளாக முற்றுணர்ந்த மெய்கண்டா
சித்தமெனக் காம்வண்ணம் செய். 12

ஸ்ரீ மெய்கண்டநாதன் திருவடி வாழ்க!

# உண்மை விளக்கம்

சித்தாந்த சிரோமணி, சித்தாந்த ரத்நாகரம், மதுரகவி,
முதுபெரும்புலவர், தருமையாதீனப்புலவர்,

**திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,**

பிரின்ஸிபால், தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரி,

(மலர் 17, இதழ் 4, பக்கம் 258 இன் தொடர்ச்சி)

'முத்திதனில் மூன்று முதலும் ஒழிய' எனக் கொண்டுரைத்தலும் பொருந்தும். ஒழிதல் - நிற்றல், மூன்றும் நிற்க என்று உரைத்துக்கொள்க. 'நூறென் கிளவி யொன்று முதலொன்பாற் கீறுசினை யொழிய வினவொற்றுமிகுமே'. (தொல்காப்பியம் 472) என்றதன் உரையில், 'ஒழிய' என்றதற்கு உரையாசிரியர் 'கெடாது நிற்ப' என்றுரைத்ததும் 'நூற்றுரொன்று' என்றதில், ஈறு (குற்றுகரம்) சினை (றகரவொற்று) இரண்டும் கெடாது நிற்றலும் அறிக. 'சுட்டு முதலுகரம் அன்னொடு சிவணி யொட்டிய மெய்யொழித்துகரங்கெடுமே' (ஷை 177) என்றவாறு, 'அதனை' 'அதனொடு' முதலியவற்றில், உகரம் கெடுவதும், அஃது ஊர்ந்த மெய்கெடாது நிற்பதும் அறிக. ஆண்டு 'ஒழித்து' என்றது 'நிறுத்தி' என்னும் பொருட்டாவதும் அறிக. 'அகமென் கிளவிக்குக் கைமுன்வரினே முதனிலை ஒழிய முன்னவை கெடுதலும் வரைநிலையின்றே' (ஷை 316) என்றவாறு 'அங்கை', 'அகங்கை' என்றவற்றில், முதனிலையாகிய அகரம் கெடாது நிற்றல் காண்க. தொல்காப்பியர் 'ஒழிதல்' 'கெடுதல்' இரண்டற்கும் வேறுபாடுணர்த்தும் ஆற்றில் அவற்றை ஆளுதல் உய்த்துணரற்பாற்று.

• கதிரோன் போலும் சிவன், கண்போலும் ஆன்மா. கதிரொளி போலும் அருள், கூரிருள் போலும் மலம், கண்கொள் இருள் போலும் ஆன்மாக் கொள்ளும் மலம், கண்ணிருள் கதிரொளியால் நீங்குவது போலும் ஆணவமலம் சிவனருளால் நீங்குவது, கண் இருள் நீங்கிக் கதிரோனொளி நேர்நிற்கில், கதிரோனாகும். அக்காலத்து அப்பேரிருள் அக் கதிரொளியிலடங்கி அவ்வொளியாய் நிற்கும். அவ்வாறே ஆன்மா (பசு) ஆணவம் நீங்கி

சிவனருள் நேர் நிற்கில், அச்சிவமாகும். அப்பொழுது மலம் அச்சிவனருளில் அடங்கி, அவ்வருளாய் நிற்கும்.

> " சூரியன் சிவன்; கண் சீவன்; சுடரொளி அருள்; மலம்தான்
> கூரிருள் ஆகும்; கண்தான் கொள்ளிருள் ஒளியால் நீங்கிச்
> சூரியன் ஒளிநேர் நிற்கில், சூரிய னும், அக் காலைப்
> பேரிருள் ஒளியாய் நித்யம் பெறும் திரிபொருள் முத்திப்பால்''.

இவ்வுபதேச விளக்கம், முத்தியிலே மும்முதலும் நிற்கும் உண்மையை விளக்கி மிகத் தெளிவுறுத்துவதும் பேரின்பம் விளக்கும்.

கதிரொளியோ நிலவொளியோ விளக்கொளியோ இருளைப் போக்குதலும் இல்லை. ஆக்குதலும் இல்லை.

சிவஞானபாடியத்தில் 'இருளுண்மை' பற்றிக் கூறிய வுரையை ஈண்டுணர்தல் நலம் பயக்கும்.

" சாத்துவிகாகங்காரத்தினின்றும் (கண் அல்லாத) ஏனை இந்திரியங்களினும் சிறந்து சத்துவகுண மாத்திரையாய்ப் பரிணமித்து ஒளியுடைத்தாகிய கண்ணிந்திரியம் தன் தொழிற்பாடு நிகழ்தற்குப் பிறிதோர் ஒளியின் உபகாரத்தை இன்றி அமையாதவாறு என்னை எனின்; - அங்ஙனம் ஆயினும், கண்ணிந்திரியம் ஏனை இந்திரியங்கள் போலாது ஒளியாற்சென்று இயைந்து விடயத்தை அறிதற்கு உரித்தாய், ஏனை இரண்டும் குறைந்து, சத்துவகுணம் மிககுப் பரிணமித்த கூறுகிய சாத்து விகாகங்காரத்தினின்றும் ஏனையிந்திரியங்களினும் சிறநது சத்துவ குணசார மாத்திரையாய்ப் பரிணமிப்புழி, அப் பகுதியின் எஞ்சிநின்ற தமோகுணக் கூறுகிய சாரம் இருள் எனப் பரிண மித்துக் குற்றச் சகசமாய் உடன்றேன்றிக் கண்ணுெளியைத் தடை செய்து நிற்றலின், அக்குற்றத்தை நீக்கி விடயத்தைக் காட்டுதற்கு ஏனையிரண்டும் குறைந்து தமோகுணம் மிக்குப் பரிணமித்த கூருகிய தாமதாகங்காரத்தினின்றும் சத்துவகுண மாத்திரையாய்ப் பரிணமித்துத் தனக்குத் துணையாகிய பூத வொளியின் உபகாரம் இன்றியமையாது வேண்டப்பட்டது என்று உணர்க''. " சாத்துவிகாகங்காரத்தினின்றும் ஆண்டு எஞ்சி நின்ற தமோகுணக்கூற்றின் பரிணுமமாகிய இருளுக்குத் தாமதாகங்காரத்தினின்றும் சத்துவ குணமாத்திரையாய்ப் பரிணமித்த பூதவொளியே மறுதலைப்பொருள் ஆகலின், அஃது

அவ்விருளாகிய குற்றத்தை நீக்கித் தன்னேடொப்பச் சத்துவகுண சாரமாத்திரையாய்ப் பரிணமித்த கண்ணெளிக்குத் துணையாய் நின்று காட்டுதல் சாலும் என்பது பொருந்துமாறு (யுக்தி. குறள். 242 பரிமேலழகர் உரை) பற்றி உணர்ந்து கொள்க. "இதனுனே ஆலோகத்தினபாவமே இருள் என்றும், அன்றிப் பாவப்பொருள் எனின், இதற்குத் தோற்றம் யாண்டையது என்றும் கூறுவார் மதங்கள் எல்லாம் போலியாய வாறு காண்க. (சிவஞானபோதம் சூ. 2. அதி. 2) ஒளியில் இருள் அடங்கி ஒளியாய் நிற்றலை, கதிரோனெளியில் உலகிருள் அடங்கி ஒளியாய் நிற்றலால் அறிக. அவ்வாறே ஆணவ விருள் ஞானவொளியில் அடங்கி, அந்த ஞானவொளியாகியே நிற்கும்.

" மோகமிக வுயிர்கள்தோறும் உடனுய் நிற்கும்
மூலஆணவம் ஒன்று(1); முயங்கி நின்று
பாகமிக வுதவுதிரோ தாயி ஒன்று (2);
பகர்மாயை ஒன்று(3); படர் கன்மம் ஒன்று(4);
தேகம்உறு கரணமோடு புவன போகச்
செயல் ஆரும் மாமாயைத் திரட்சி ஒன்று(5) என்று
ஆகமலம் ஐந்து என்பர், ஐந்தும் மாருது
அருள் என்பது அரிது என்பர் அறிந்து ளோரே "
(சிவப்பிரகாசம் 32)

இத் திருப்பாடலை 70 ஆவது திருப்பாடலோடு பொருத்தி உணர்தல் வேண்டும். அப்பாடல் இது :-

" மாயைமா மாயை மாயா வரும் இரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் மருளேனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வரும் இரு வினையின் வாய்மை
ஆய ஆ ருயிரின் மேவும் அருளேனில் ஒளியாய் நிற்கும் "

'ஆன்மா மலத்திற் பிணிப்புண்டு பசு எனப் பெயர்பெற்று நின்ற வழி, ஆன்மாவின் வியாப்பியமான மாயை முதலியனவும் திரோதானமும் மலத்திற்குக் கருவியாய்ப் பாசம் எனப் பெயர் பெற்று மலமேயாய் நிற்கும்'

'ஆன்மா பசு என்னும் பெயர் நீங்கி முத்தனுய் அருளோடும் கூடி நின்றவழி, அவ்வான்மாவின் வியாப்பியமான மாயை முதலியனவும், திரோதானசத்திபோலப் பாசம் என்னும் பெயர்

நீங்கி அருளேயாய் நிற்கும் என்க' (சிவஞானபாடியம் சூ. 2. அதி. 2.) 'பசுபாசங்களும் சிவஞானத்தான் அன்றி அறியப்படா' (ஷ 6)

'மாயை மாமாயை என்னும் செய்யுளுக்கு மாயை முதலிய மூன்றும் ஆன்மா நின்றபடி நிற்கும் என்பதே செம்பொருள் எனக்கொள்க.' (சிவஞான பாடியம் சூ. 2. அதி. 2)

'முதல்வனுக்குத் திருமேனியாகிய சைதன்னியம் முதல்வனைச் சார்ந்து அவ்வண்ணம் ஆயவழி அவ்வுடம்பும் அவ்வாறு அருள்மயமே ஆகலின், இழுக்கு இன்மையான் அவ்வுடலிடங்கோடல் பொருத்தம் உடைமையானும் தமது முதல்தானே குருவுமாயுணர்த்தும் என மேற்கொண்டது சாலும் என விடுத்தவாறு அறிக' (ஷ சூ. 8, அதி. 2)

'இருளின் இருளாகி எல்லிடத்தின் எல்ஆம் பொருள்கள்' (திருவருட்பயன் 18) அம்மாயை முதலியன என்றவாறு, 'மருளினில்' 'அருளினில்' என்றும், 'மருளேனில்' 'அருளேனில் என்றும் பாடபேதம் உண்மையைச் சிவஞானபாடியத்திலேயே அம் மூவிடத்தும் காணலாம். ஆசிரியர் சிவஞான முனிவர் 'எனில்' என்று பாடம் கொண்டுரைத்தாரல்லர் என்பது அவற்றை உற்றுணரின் தோன்றும்.

[1] மாயை, [2] மாமாயை, [3] இருவினை [4] மருள் (திரோதாயி) [5] இருள் (ஆணவம்) என்னும் ஐந்தனுள், 'மருள்' உயிரைச் சார்ந்து செலுத்தும் பேத்த காலத்தில், முதல் மூன்றும் ஐந்தாவது போன்று இருளாய் நிற்கும். 'அருள்' சார்ந்த முத்தி நிலைக்கண், ஒளியாய் (சிவமாய்) நிற்கும். பரமே பார்த்திருக்குங் காட்சியிற் பதார்த்தங்கள் நிற்கும் நிலையும் இதுவும் ஒக்கும்.

[1] மாயை, [2] மாமாயை, [3] இருவினை ஆகிய மூன்றும் எழுவாய். 'இருளாய் நிற்கும்' என்பது பயனிலை. அம்மூன்றும் இருளாய் நிற்றற்கு ஏது 'மருள்' என்பதால் விளங்கும். அம்மூன்றும் ஒளியாய் நிற்றற்கு 'அருள்' ஏதுவாயிற்று.

[1] மருள் (திரோதான சத்தி) [2] இருள் (ஆணவமலம்) மாயை, [4] கன்மம், [5] மாமாயைத்திரட்சி ஆக ஐந்து மலமும்

இத் திருப்பாடலிற் கூறியவாற்ருல், 'மாமாயை' என்றது மாயேயத்தை என்று இனிது விளங்கும். உமாபதிதேவ நாயனர் ஈரிடத்தும் மாயேயத்தையே மாமாயை என்றது உறுதியாயிற்று.

'மாயையும் கருமமும் தொகுத்துத் தடைசெய் யாணவத் தோடு மலம் மூன்றெனத் தகுமால்' 'மாயை காரியமான மாமாயையும் நமது தூய சீரருள் எனும் திரோதாயியும் தொகுத்திட்டாயும் நூல் மலம் ஐந்தென அறைவதும் உண்டால்.' (திருவானைக்காப் புராணம், ஞானேபதேச காண்டம் 17, 18.)

மூலமலம் ஆனது வினை உள்ள அளவும் உயிரை மறைத்து அருள் வினைப்பயனை ஊட்டுதற்குத் துணையாகும். அருள் மிக்கபோது, உயிரை மறைத்த மூலமலத்தை அவ்வருள் மறைத்துப் பேரின்பம் ஊட்டும் என்பது.

"முன்னைவினை யுள்ளளவும் மூலமலம் தான்அருளால்
உன்னைமறைத்து அவ்வினைகள் ஊட்டுவிக்கும்—பின்னைஅருள்
மன்னிமிகுத் துன்னை மறைத்ததொழில் மூலமலந்
தன்னைமறைத் தின்பம் தரும்"

என்ற ஞானசாகரத் திருவெண்பாவால் விளங்கும்.

இவற்ருல், முத்தியில் ஆணவமலம் மறைந்துள்ள வாய்மை புலனுகும். ஆகவே, 'இத்தை விளைவித்தல் மலம்' என்றதன் கருத்து நன்கு விளங்கும.

அரிசியோடும் சகசமாய் நின்ற முளை, தவிடு, உமிகள் கேட்டொழிய அரிசி கேடின்றி நிலைபெறுதல் கண்டாம். அவ் வரிசி முன்போல வேறு ஒரு நெல்லுத் தோன்றுதற்குக் காரண மாதல் செல்லாமையான், அவை அவ்வரிசியின்கண் அடங்கி நிற்கும் என்றற்கு ஓர் இயைபு இன்மையின், அவை ஆண்டு இல்லை என்பதே தேற்றம். அவைபோல அநாதியே உயிர் களோடு சகசமாய் நின்ற மும்மலங்களும் முத்திநிலைக்கண் விண்டொழியும் என்றே கொள்க. ஆண்டு விண்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படுதலால் அவை நித்தப் பொருளாதற்கும் இழுக்கில்லை என்பதாம்" என்னும் (சிவஞான சித்தியாரில் 'நெல்லினுக்குத் தவிடுமிகள்' எனத் தொடங்கும்

திருவிருத்தத்தின்) உரையையும் 'இத்தை விளைவித்தல் மலம் என்பதூஉம் அறிக' என்ற குறிப்பையும் ஈண்டு நோக்குக.

" நல்ல சிவமுத்தியின்கண் பேத்தான்மாவை
நணுகிநிற்கும் ஆதலால் நாசமும் இன்ருமே "

என்றதால் ஆணவம் முத்தான்மாவை நீங்கி நிற்குமே அன்றி நாசம் உருது என்றும் பொருள் படுதல் அறிக.

" முன்னமே மூன்று முதலும்உள தாயிருக்கத்
துன்னி ஒருமுதலும் தோன்ருமல்—மன்னியிடும்
ஆதிமலம் போல நிறை யானந்தத் தான்மறைந்து
பேதமற நிற்பதுதான் பேறு." (ஞானசாகரம், 92)

என்றது 'ஆணவத்தோடத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத் தாணுவினே டத்துவிதம் சாரும்' பேறுகூறுகின்றதாயினும், மூன்று முதலும் அநாதியாயுண்மை கூறுமுகத்தான் முத்தியிலும் அவை உண்மை குறிப்பாயுணர்த்துதலறிக.

" சுடரால் இருள்தேடச் சோல்லார்கள் எந்தாய்
சுடரால் இருள்தேடச் சொன்ஞய்—சுடர்கின்ற
ஞானத்தால் ஆணவத்தை நாடரிது, நாடுவதேன்
ஞானத்தால் ஆணவத்தை நான்,"

என்பது 'அருளும் ஆணவ மலமும் சுடரும் இருளும்போல் அல்ல, ஆணவமலம் இல்லாமல் சேனனம் உண்டாகாது என்றது, இஃது அனுமானக் காட்சி என்றது,

" மூலமலம் என்றும் அழியா முதல் என்று
ஆல நிழற்கடவுள் அன்றறைய—ஞாலத்தே
ஆதித்தன் சந்நிதியில் அந்தகா ரம்போல
ஓதிற்றேன் மெய்கண்டாய் உற்று "

என்பது ஆதித்தன் விளக்கந்தானே இருணிலே யென்பது, (சதமணிக்கோவை 61 - 62) 'பரிதிமுன் இருள் என மலம் பரையிடைமாயும்' 'இரவி முற்பட்ட இருளைப்போல ஆணவ மலம் இது ஞானத்தில் அடங்கி ஒழியும்' (திருவானைக்காப் புராணம் ஞானேபதேசப்படலம், 31. உரை) என்பனவும் ஈண்டு அறிதற்பாலவாம். மலம் நசித்தலாவது தனது மறைத் தற்சத்தி மடங்கிக் கீழ்படுதல் மாத்திரையே பிறிதன்று (சிவஞான பாடியம். சூ. 11 முடிவு) 52.

52 " அப்பா இம் முத்திக் கழியாத காரணம் தான்
சேப்பாய் அருளாலே சேப்பக்கேள்—ஒப்பில்
குருலிங்க வேடம்எனக் கூறில் இவை கோண்டார்
கருவோன்றி நில்லார்கள் காண்."

அப்பனே அடியேன்பால் கோண்ட இரக்கத்தாலே இவ் வீடு பேற்றிற்கு அழியாத காரணத்தைச் சோல்லியருள்வாய். இது மனவாசகங்கடந்தார் விஞவியருளியது.

மேய்கண்டதேவநாயஞர் அருளிய விடை :- 'சோல்லக் கேள், ஒப்பில்லாத சிவஞான தேசிகனும் இணையில்லாத சிவலிங்கமும், நிகரில்லாத சிவவேடமும் என்று வீடுபேறு வித்தற்கு மூன்று காரணம் கூறும் சிவாகமம். அச்சிவா கமங்கள் ஒப்பில்லாக் குருலிங்கவேடம் மூன்றுமே முத்தி காரணம் எனக் கூறின், இம்மூன்றும் கோண்ட நல்லோரே கருவாய்க் கிடவாத திருவாளர் என்று காண்க'.

குரு காரணம் ஆம் ஆறு :—

" தேசிகனை ஆவேசம் சேய்தே சிவன் சகலார்
பாசம் அறுப் பான் என்ருேர் பார்வை பேற்ற—தேசிகன்தான்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கோத்தையேல்லாம்
நீத்தான் எனும் சோல் நினை." (சம்பிரதாய தீபம். 131)

" வாயிலா மட்குடத்துள் மாநீர் நிறைதல்போல்
தாயிலும்நல் லன்யான சற்குருவின்—நேயத்
தருள் நோக்கத் தால்உயிர்க்குள் ஆனந்த வேள்ளம்
இரவுபகல் போக்கி எழும்," (ஷை 132)

" சூரியகாந் தக்கல்லில் சூரியன்மேய்ப் பேரோளிதான்
சேரும்போ தங்கியேழும் சிற்கனமாய்ப் - பேரறிவாம்
ஆசான் திருநோக்காம் ஆதித்தனல் உயிர்க்குள்
தேசோ மயம் உதிக்கும் தேர் " (ஷை 133.)

" மீனேக்கத் தாலே விடுத்தசினை நீர்தானும்
மீனாக வேவளரும் மேய்க்குருவின் - ஞானத்
திருநோக்கத் தால்உயிரும் சிற்றறிவு நீங்கிப்
பரிபூ ரண அறிவாம் பார் " (ஷை 134.)

" துலையொத்த காலைத் துரியன் குருவாய்
நிலையொக்க நின்று நிகழ்த்தி - மலம் அற்று
நற்போக இன்பத்து நண்ணுவித்தல் காரணமே
யற்போகம் ஆன்ற அளி " (ஷை 191)

" அருளே குரவன் பரமுத்திகாட்டும் உபாயம் " (ஷை 216)

சிவலிங்கம் காரணம் ஆமாறு :-

" திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவன் உறைவன் அங்கே "

" அவளால் வந்த ஆக்கம் இவ் வாழ்க்கையெல்லாம் இத்தையும்
அறியார் பீடலிங்கத்தின் இயல்பும் ஓரார் " (சித்தியார்)

சிவலிங்கமும் சிவசங்கமமும் காரணம் ஆமாறு :-

" தாபர சங்கமங்கள் என்றிரண்டுருவினின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க்கருளை வைப்பன் "
(சித்தியார்)

சிவஞானபோதம் சூத்திரம் 12. சிற்றுரையும் பேருரையும் காண்க.

தொழப்படுவாரது கருத்துவகைப்பற்றிச் சிவனெனத் தெளியுமாற்றால் திருவேடம் காரணம்; தொழுவாரது கருத்து வகை பற்றிச் சிவனெனத் தெரியுமாற்றால் சிவலிங்கம் காரணம், சிவன் குருவை ஆவேசித்து நின்று செய்யும் பரிசம் முதலிய வற்றால் சிவமாக்கும் உண்மையால், சிவபோதம் எல்லாம் குருமூர்த்தமே எனத்தேறி வழிபட வீடருளலாலும் அறிவ தொரு குறியை அறிவித்தருள்வதாலும், குருவால் ஞான நிட்டையும் ஞான நிட்டையால் சிவப்பேறும் எய்தும் முறைமை யாலும் குருகாரணம்.

53 " கற்றமனம் போல் கசிந்து கசிந் தேஉருகி
உற்றசான் லிங்கம் உயர்வேடம் - மற்றக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார். "

சீவன் முத்திபெற்ற முதல்வரும், மல வாசனை முழுதும் நீக்கு தற்கு ஏதுவான அன்பு செய்யும் நெறியில் நின்று, குருலிங்க

சங்கமம் மூன்றும் பற்றுக் கோடாகிய பொருளாகக் கொண்டு, ஈன்றணித்தாய கன்றையுடைய ஆவினைப்போலக் காதலாகிக் கசிந்து கசிந்து பள்ளமடை வெள்ளமெனக் கண்ணீர்மல்க உருகி வழிபடுவர். ஆதலால் நீயும் அதனைப் பார்த்து அச்சிவ தேசிகனையும் சிவலிங்கத்தையும் சிவ வேடத்தையும் அன்பு கொண்டு வழிபட்டுய்க.

'சூரிய காந்தக் கல்லினிடத்தே செய்யசுடர் தோன்றியிடச் சோதி தோன்றுமாபோல் ஆரியனும் ஆசான் வந்து அருளால் தோன்ற அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்; தோன்றத் தூரியனும் சிவன் தோன்றும்.

குருவால் ஞானநிட்டை அடைந்து நாதன் தாள் அடைவர் (சித்தியார்.)

சேக்கிழார் நாயனர் புராணத்திலே சிவலிங்கத்தாலும் சிவவேடத்தாலும் குருவருளாலும் முத்தி பெற்றோர் திருப்பெயர்களைப் பகுத்துக் கூறுதல் காண்க.

"செல்வமெனக் குருலிங்க சங்கமத்தைப் பொருளாச் சிந்தையில் வைத்துருக எல்லாச் சித்தியும் உண்டாமே" (சித்தாந்தசாரம் 32) என்பதும் உள்ளத்திற் கொள்ளற்பாலது.

மோசித்தல் - நீக்குதல், "பலவிதம் ஆசான் பாசமோசனம் தான் பண்ணும்படி (சித்தியார்).

54 "[4]வாழ்ந்தேன் [2]அருட்கடலே வற்றுப் பவக்கடலில்
வீழ்ந்தேன் அலையாமல் மேதினியில் — சூழ்ந்துவிட
[1]வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
உண்மைத் தவப்பயனே [3]உற்று."

[1]நாதனே. பயனே, [2]கடலே வற்றுப் பவக்கடலில் வீழ்ந்தேன் மேதினியில் அலையாமல் சூழ்ந்து விட்டு, (உன்திருவடியை) [4]உற்று, [3]வாழ்ந்தேன்.

வெண்ணெய்-திருவெண்ணெய்நல்லூர் என்றதன் சுருக்கம். சுவேதவனம் :- 'வெண்காடு' என்னும் பழைய தமிழ்ப்பெயரைக் குறித்த வடசொற்றொடர். உண்மைத் தவம்-உண்மைச்சரியை, உண்மைக் கிரியை,. உண்மை யோகம் ஆகிய இறப்பில் தவம் மூன்றும். பயன் - நன்னெறியாகிய ஞானமும் அதன்

பயனுகிய பேரின்பமும், 'மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கோடாவாகலான், இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது' (சிவஞானபோதப் பொழிப்புரை, சூ. நீ) 'இறப்பில் தவத்தான் மருவுவனும் ஞானத்தை' (ஷை வேண்பா). உற்று :- உறுதற்குச் செயப்படுபொருள் மெய்கண்டநாதர் சேவடி. விடா - விட்டு; செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். சூழ்ந்து விடுதல் - ஆராய்ந்து நீக்குதல், விடுதல் - வீடு. உறுதல்-பேறு. பாச நீக்கமும் சிவப்பேறும் கூறிற்று. கடலில் வீழ்ந்து மேதினியில் (உலகியலில்) அலையாமல் இருக்கத்தக்க ஞானநெறியைச் சூழ்ந்து, அஞ்ஞான நெறியை விட்டு என்றலுமாம். 'மெய்யன்பர்கள் சூழ்ந்துவிடாத என்ற பழையவுரையும் கொள்க. பவக் கடலில் வீழ்ந்து, அலையாமல் மேதினியிற்சூழ்ந்து விட்டு, அருட்கடலே உற்று வாழ்ந்தேன் எனலும் பொருந்தும். முத்திக் கரையாகிய உனது திருவடியை உற்று (அடைந்து) வாழ்ந்தேன். என்றது பழையவுரை. 'என்னை இப்பவத்திற் சேராவகை எடுத்து என் சித்தத்தே தன்னை வைத்தருளினுலே தாளிணை தலைமேற் சூட்டும் மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவி வாழ் மெய்கண்டான்' (சித்தியார்) 'திருக்களரும் கயிலைமலைக் காவல் பூண்ட செல்வமலி திருநந்தி மரபில் வந்து கருக்குழியில் எமை வீழாதெடுத்தாட்கொள்ளும் கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய மருக்கிளர்தாள் பரவும் அருள்நந்தி தேவர்' (சேக்கிழார் நாயனர் புராணத்தின் சிறப்புப் பாயிரம்)

சிறப்புப்பாயிரம் அபியுக்தர் வாக்கு.

55 "மன்னதிகை வாழும் மனவாச கங்கடந்தான்
மின்னனைய வாழ்விலுறும் மெய்கண்டான் — பன்மறைகள்
வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா
வுண்மைவிளக் கஞ்செய்தான் உற்று"

"மனவாசகங் கடந்தார் மலரடி போற்றி
மெய்கண்ட தேவர் விரைகழல் போற்றி"

திருவருளாலும் தருமைக் குருவருளாலும், உண்மை விளக்கம் என்னும் சிவஞானப்பனுவலுக்கு, தருமையாதீனப் புலவர் முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் எழுதிய உரை முற்றிற்று.

தருமபுர ஆதீனம்

## ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி மகோற்சவம்

## 10-ஆவது

# திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு

**முதல் நாள் - திருநந்திதேவர் திருநாள்**

**29—5—58 வியாழன் அன்று திரு. S. நடராஜ நாடார் B.A., B.L., அவர்கள் (ஒய்வுபெற்ற ஜில்லா நீதிபதி, மதுரை.) ஆற்றிய தொடக்கவுரையின் சுருக்கம்.**

இந்தத் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றம் கயிலாயக் காட்சியாக விளங்குகிறது. வெள்ளிக் கயிலாயத்தில், ரிஷபம், கணபதி, சுப்பிரமணியர் அஷ்டதிக்குப் பாலகர்கள் இருப்பது போல இங்கும் பார்க்கிறோம். நால்வர் முதலான அடியார் அனைவரையும் காண்கிறோம். இந்த மன்றத்தைக் கயிலாயக் காட்சியாக ஆக்கிய பெருமை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அருள் உள்ளத்திற்கே உரியது. அவர்கள் முன்னிலையில் பேசும் பெருவாய்ப்பைப் பெற்றிருக்கிறேன். இன்று திருநந்தி தேவர் திருவிழா. உண்மையாகவே நந்தி தேவர்தாம் நம்மை இறைவன் திருவடிகளிலே சேர்ப்பவர். நந்தி தேவர் மூலமாகச் சிவபெருமான் பாதார விந்தங்களை அடைவதற்கு அனுகூலம் பெறப் பிரார்த்தித்துப் பேச்சைத் தொடங்குகின்றேன். குருமகாசந்நிதானம் அவர்களும் தம்பிரான் சுவாமிகளும் குருபரம்பரை முறையிலே வந்தவர்கள். குருபரம்பரை முறையில் இன்று ஆட்சியில் இருக்கும் குருமகாசந்நிதானம் அவர்களை வெள்ளி விழாத் தலைவர் என்று

---

குறிப்பு :— வித்துவான், ஸ்ரீமத். சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் பின்னர் வெளியிடப்பெறும்.

திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் பொருளை இதன் முதலுறுப்பில் (தலையங்கத்தில்) காண்க.

கூறலாம். 25ஆவது ஆண்டில் வெள்ளி விழாக்கொண்டாடுவது வழக்கம். 25 ஆவது மகாசந்நிதானம் அவர்களும் வெள்ளி விழாத்தலைவரே. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பட்டம் பெற்ற நாள்முதல் நல்ல துறையில் மக்கள் நல்வாழ்வு பெற்று வாழ்தற்குக் கருணை புரிகிறார்கள். அவர்களிடம் பழமையில் பழமையும் புதுமையில் புதுமையும் இருக்கின்றன. அதுவன்றிப் பழமையில் புதுமையும் புதுமையில் பழமையும் கலந்து சிறப்புடன் விளங்குகின்றன. அவர்கள் ஆட்சியிலே இருக்கும் 27 கோயில்களையும், கோயில்கள் புனிதமாக இருக்கவேண்டும், தெய்வீக நிலையினை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் சிறந்த முறையில் - அழகான முறையில் அமைத்திருக்கிறார்கள். கோபுரங்களும் திருத்தம்பெற்றுள்ளன. பூஜைகளையும் எந்த எந்த முறையில் நடத்தவேண்டுமோ அந்த முறையில் சாஸ்திரரீதியாக நடக்க ஏற்பாடு செய்துள்ளனர். நான் பல ஆண்டுகளாகச் சட்டமன்றத்தில் வேலைபார்த்து இருக்கின்றேன். அப்போது கோயில் நிர்வாகங்களையும் நிலங்கள் முதலியவற்றையும் பாதிக்கும் சில சட்டங்கள் செய்யப்பட்டமையையும் அவற்றால் கோயில் நிர்வாகங்களுக்கு ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களையும் கண்டிருக்கிறேன். இருந்தாலும் சர்க்காருக்கும் பிறருக்கும், முரண்பாடின்றி 27 கோயில்களையும் நிர்வகித்து வருவது நம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களையே சாரும். தேவாரத் திருமுறைகளை நல்ல பதிப்பாக வெளியிட்டுள்ளார்கள். தருமை ஆதீன வெளியீடுகளில் சிறந்து விளங்கும் திருக்குறள் உரைவளம் போல வேறு யாரும் சிறந்த நூலினை வெளியிடவில்லை. அதன் பொருட்டுத் தமிழகத்தார் அனைவருமே நன்றி பாராட்டும் கடப்பாடுடையவர்கள். சென்னையில் சமயப் பிரசார நிலையம் நிறுவியுள்ளார்கள். அதன் பொறுப்பைக் கவனித்துவரும் ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் தொண்டு மிக நல்ல தொண்டு. அங்கேயே ஒரு தேவாரப் பாடசாலையும் ஏற்படுத்தி நண்பர் சுவாமிநாதன் அவர்களைத் தேவார ஆசிரியராகச் செய்ததும் பாராட்டத்தக்கதே.

இவ்விதமாக ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் மக்களின் சமயப் பண்பைப் பலவிதமாக வளர்க்க எண்ணுகிறார்கள். இங்குத் தமிழ்க் கல்லூரி சிறந்த முறையில் நிறுவப் பெற்றுள்ளது. பழைய பண்பாட்டுடன் அமைந்த தேவாரப் பாடசாலையையும் அமைத்துள்ளார்கள்.

தற்கால அரசியலில் ஏற்பட்டுள்ள சில மாறுதல்கள் காரண மாக மக்கள் ஆதீனங்களுடன் தொடர்பு வைத்துக்கொள்வ தில்லை. ஆதீனங்களுடன் மக்கள் தொடர்பு எவ்விதமிருக்க வேண்டுமென்று சிறிது சொல்ல விரும்புகிறேன். இப்போதுள்ள நம் நாட்டு அரசியல் மதச்சார்பற்ற அரசியல். மதச்சார்பற்ற அரசியல் என்பது எல்லோருக்கும் அமைந்த மத உரிமை. இருந்தாலும் அரசியல் சட்டம் ஒரு குறையைச் செய்கிறது. அதனை ஆதீனங்கள்தான் நிவர்த்திக்கவேண்டும். அதற்கும் மக்கள் ஆதரவும் அவசியம். இது சமயத்தில் ஏற்பட்ட குறை. மொழித்துறையை எடுத்துக்கொண்டால் - தமிழ் அரசியல் மொழியானது. கல்வித்துறையில் தமிழாக்கம் செய்தவர்கள் அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்கள். பள்ளிகளில் திருக்குறள் பாடமாக வைக்கப்பட்டது. திருக்குறள் மாநாடு நடத்தப்படு கிறது. எல்லோரும் திருக்குறள் படிக்கின்றனர். வாழ்வு நல்ல முறையில் நடைபெற திருக்குறளே சிறந்த கருவியாயுள்ளது. அப்படி இருந்தால் நல்ல பண்பு அமையும், தமிழ் உயரும். இலக்கியமே அன்றியும் தெய்வ நூல்களையும், ஞான நூல்களையும், விசேஷமாகப் பெரிய புராணத்தையும் எல்லோரும் படிக்க வேண்டும். இது ஆராய்ச்சிக்காலம். உண்மையான தத்துவத்தை உட்கருத்தை உயரியமுறையில் எடுத்துச்சொல்லக் கற்றோர் முன் வர வேண்டும். உள்ளத்தை நன்றாக எடுத்துக்காட்டப் பெரிய புராணம் நன்கு அமைந்துள்ளது. இந்த முறையில் மக்கள் ஆதீனங்களுடன் அதிகத் தொடர்புகொண்டு நடக்கவேண்டும். எல்லோரும் வள்ளுவர் காட்டிய வழிப்படி நடந்தால் ஆண்டவன் அருள் விருந்து எளிதில் கிடைக்கும். மாணவர்களுக்குக் கட்டுப் பாடான வாழ்க்கை வேண்டும். நேர்மை, உண்மை நாட்டில் குறைந்து வருவதாகத் தெரிகிறது. மனிதன் மனிதனாக வாழ வேண்டும். தேவர்களாக மாற வேண்டும். நல்லநிலை அடையத் தம் வாழ்க்கையை ஒவ்வொருவரும் திருப்பவேண்டும். சிவ சிந் தனை இப்போது மக்களுக்கு இருப்பினும் இன்னும் நல்ல முறை யில் அச்சிந்தனை வளரவேண்டும். இன்று திருவிழா நடக்கும் இடங்களில் நிறையமக்கள் கூட்டத்தைக்காண்கிறோம். அநேகர் திருவிழாவுக்குப் போகிறார்கள். அங்கு உண்மையான தெய்வீக உணர்ச்சி உண்டாகவேண்டும். அதற்கு வந்த சூழ்நிலையையும் உள்ளத்தைப் பண்படுத்த வேண்டிய நியதிகளையும் ஆதீனங்கள் தாம் அறிவுறுத்த முடியும். இவ்விதம் மக்கள் ஆதீனங்களுடன் தொடர்புகொள்ள வேண்டுமென்று நான் கருதுகிறேன்.

உள்ளத்தூய்மை, புனிதமான செயல் மனத்தில் நல்ல நிம்மதி - அதாவது சமாதானம் வேண்டும். கோபம், தாபம், கெட்ட எண்ணம் இவற்றை நீக்க வேண்டும். மக்களிடம் அன்பும் அருளும் காட்டவேண்டும். இவ்விதம் நடந்தால்தான் ஆண்டவன் நமக்குத் துணைசெய்கிறான். 'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று மணிவாசகர் கூறியது போல எப்பொழுதும் சிவசிந்தனை வேண்டும். அப்பர் பெருமானும் புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா நின்னடி மறவாதிருக்க வரந்தரல் வேண்டும் என்றார். ஏனைய சமயாசாரியர்களும் அவ்வாறே வேண்டியிருக்கின்றார்கள். ஒவ்வொருவரும் ஆண்டவனிடம் மன்றாடி வேண்டுவோமானால் இறைவன் மணிவாசகப் பெருந்தகைக்குக் குருவாக வந்து அருளியது போல அருள் செய்வான். நமது ஆதீன குருமுதல்வர் ஆண்டவனை மன்றாடிய பிரார்த்தனை பலித்தது. அவனருளால் ஆசான் கிடைத்தார். ஆசான் அருளால் நல்லநிலை யடைந்தார். அவ்விதம் நமக்கு அருள் சுரக்க வேண்டுமென்று பிரார்த்திப்போமானால் ஆண்டவன் நமக்கு அருள் செய்வான். ஆண்டவன் உலகையும் படைத்து அதில் பல்கோடி மக்களையும் படைத்துள்ளான். வாழ்வில் அவன் போட்ட திட்டங்களுக்கு இசைந்து நடக்க வேண்டும். மாறாக நடந்தால் தீமையே விளைகின்றது. ஒரு கடிகாரத்தில் பல சக்கரங்கள் இருப்பினும் அவை அனைத்தும் ஒரு நெறியில் இயங்கும் போதே சரியான மணியை நாம் அறிய முடிகிறது. எந்த நெறி இருந்தாலும் சிறந்த நெறியில் நெறி தவறாமல் நடந்தால் ஆண்டவன் நிச்சயமாக அருள்புரிய வருவான். அப்படி வாழ்வைத் திருத்திப் புலவர்களையும் பண்டிதர்களையும் வரவழைத்து மக்களுக்கு நல்லறிவு ஊட்டலாம். இவ்வாறு நல்வாழ்வு வாழ்ந்தால்தான் திருநந்திதேவர் ஆண்டவன் சந்நிதிக்கு அழைத்துச் செல்வார்.

குரு சிஷ்யத் தன்மை எப்படியிருந்தால் சிறக்கும்? ஆண்டவனுக்கும் நமக்கும் இடையே ஒருவர் அவசியமா? என்று கேட்கலாம். நாம் ஆண்டவனுடன் தொடர்புற ஓர் குரு அவசியமே. உதாரணமாக ஒலி பெருக்கியில் பேசும் ஒலியை கேட்க 'மைக்' என்னும் கருவி தேவைப்படுவதைப்போல என்று கூறலாம். 'ரேடியோ செட்'டை வாங்கி அதனை சரியான முறையில் பொருத்தி நாம் கேட்க வேண்டிய இடத்தில்

அமைத்தால்தான் நாம் விரும்பியபடி கேட்க இயலும். அது போல ஆண்டவனை அடைய பிரார்த்தனை முறை சிறந்தது. அதற்கு மனச்சாட்சி நல்ல உள்ளம் என்னும் மனப்பொருத்தம் வேண்டும். ஆண்டவனுடன் தொடர்பு கொள்ளவும் உபதேசம் தான் வேண்டும் அந்த ரகசிய உண்மைகளை உள்ளவாறு உணர்த்த முடியும்.

## இரண்டாம் நாள் - திருஞானசம்பந்தர் திருநாள்

30—6—58 வெள்ளியன்று புலவர், திரு. N. R. முருக வேள் M.O.L. அவர்கள் (ஆசிரியர், கிறித்தவர் கல்லூரி, தாம்பரம்.) " தமிழ் ஞானசம்பந்தர் " என்பது பற்றிச்சொற் பொழிவாற்றியதன் சுருக்கம்.

தமிழ் ஞானசம்பந்தர் என்னும் பொருள்பற்றிப் பேசுமாறு பணிக்கப்பெற்றேன். தமிழ்நாட்டில் சைவ சமயம் எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்தோன்றியது. ஜான் என்னும் அறிஞர் தோன்று தொட்டு வரும் சமயங்களில் தலைமை பெற்ற சிறந்த சமயம் சைவசமயமே என்று கருதுகிறார். சைவ சமயத்துக்குத் தலைவர்களாக விளங்கிய பெரியோர்கள் பலர். திருஞான சம்பந்தர், காரைக்காலம்மையார் முதலான சைவப் பெரியோர்கள் விளங்கிய சமயம் சைவ சமயம். தமிழ்ப் பெருந்தலைவர் - முதற் பெருங் குரவர் - திருஞானசம்பந்தர். அவருக்குப் பின்னே தோன்றிய சான்றோர்கள் அவரை வழிபட்டு வணங்கி அருள் அடைந்தனர். அருட்பாக்களைப் பாடினர். இராமலிங்க அடி களாருக்குச் சில ஐயப்பாடுகள் தோன்றின. அன்பு நெறியால் திருநெறித் தமிழ் கொண்டு ஐயந்தீர்த்தருள வல்லவர் திருஞான சம்பந்தரே என அவரை உயிர்க்குயிராகக் கொண்டார் வள்ள லார். " என்னுயிர்க்கு உயிரெனும் குருவே " " முன்னுறு நிலையும் பின்னுறு நிலையும் முன்னினின்று உளம் மயக்குறுங்கால்......... அரசே! என்று பாடுகிறார் ". அப்படியே தாயுமானவரும், முருகன் அருள்வரமே வேண்டும் என்கிறார். அருணகிரியாரும் திருஞானசம்பந்தரால் தெய்வத் தமிழ் வாழ வேண்டும் என்று பாடுகின்றனர். கவிதை வன்மையிலே ஒப்பும் உயர்வும் அற்ற அருணகிரிநாதரே திருஞானசம்பந்தரை வழிபடுகிறார். முருகனையே உயிராகக்கொண்ட அருணகிரியார் திருஞான சம்பந்தரை முருகனாகக் காண்கிறார். நம்பியாண்டார் நம்பிகள்

தம் ஆறு பிரபந்தங்களிலே ஞானசம்பந்தரைப்பற்றி நன்கு குறித்துச் செல்கிறார். பேரியபுராணம் பற்றிக் கூறும்போது புராணம்பாதி, பிள்ளைபாதி என்ற அளவில் அமைந்துள்ளதாகக் கூறுகிறார். சிறந்த இலக்கியமான பேரியபுராண ஆசிரியர் 'ஆவாழ்க அந்தணர் வாழ்க' என்றும் 'சிறியேன் கும்பிட்டேன்' என்றும் கூறுவார்களென்றால் சேக்கிழார் திருஞான சம்பந்தர்பால் கோண்டிருந்த பற்று வியத்தகு தன்மைத்தே. பட்டினத்தாரோ, இறைவனை, 'தோடுடைய சேவியன்' என்று சுட்டிக்காட்டிடத் தோன்றிய தோன்றல் திருஞானசம்பந்தர் என்று கூறுகிறார்.

பேரிய புராணம் தோன்றக் காரணமாக இருந்த சுந்தரர் பேருமான் தமிழ் ஞானசம்பந்தன், நல்லிசை ஞானசம்பந்தன் என்று சோல்லி நாவுக்கரசர் பாடலையும் பலகாலும் கேட்க விரும்புவதாகக் கூறினர். திருஞானசம்பந்தரும் அப்பரும் சமகாலத்தவர்கள். இன்று மகாத்மா காந்தியை 'Father of the nation' என்று கூறுவதுபோல திருஞானசம்பந்தரைக் கூறலாம். சிறப்புற்ற அப்பர் அடிகளே, சம்பந்தரின் பேருமையில் அன்பு கோண்டு அவரைத் தம்மினும் சிறந்தாராகப் பாராட்டுகிறார். திருநாவுக்கரசர் முதல் இராமலிங்க அடிகளார் வரையில் திருஞான சம்பந்தர்பால் ஈடுபாடு கோண்டிருந்தனர். திருஞானசம்பந்தர் தமக்கு முன்னிருந்த பல சான்றோர்கள் சேய்யாத அருமை ஒன்றைச் சேய்தார்.

தோல்காப்பியர் தோல்காப்பிய நூலைச் சேய்தபோது மக்களை இயக்கிச் சேய்யவில்லை. திருக்குறள் ஆசிரியர் மக்கள் கூட்டத்தை உண்டாக்கித் தம் நூலைச் சேய்யவில்லை. இளங்கோவடிகள் மக்கள் கூட்டத்தில் இருந்து மக்களுக்குள் ஈடுபட்டுத் துன்புற்று சிலப்பதிகாரம் எழுதினாரில்லை; குணவாயிற் கோட்டத்தே தவமிருந்த காலத்தே சேய்தார். மூலைமுடுக்குப் எங்கும் சேன்று தமிழுக்கு - தமிழ்மக்களுக்கு, சமயத்துக்குப் பாடுபட்ட சான்றோரில் முதன் முதல் தோன்றியவர் திருஞான சம்பந்தர். மக்கள் கூட்டத்தில் ஒரு புரட்சியை முதன்முதல் சேய்தவர். காந்தியும் நேருவும்; இன்று அரசியல் முன்னேற்ற உலகில் சிறந்து விளங்குகின்றனர். திருஞானசம்பந்தர் 1300 ஆண்டுகளுக்குமுன் அதனை மக்கள் சமுதாயத்தில் உண்டாக்கினார். 7 ம் நூற்றாண்டில் தோன்றிய திருஞானசம்பந்த

மக்களிடையே ஓர் புரட்சியை உண்டாக்கி வாழிய செந்தமிழால் கவிநலங்கனியப்பாடி சமயத்திற்கு ஆக்கஞ் செய்தனர். நம்பி யாண்டார் நம்பிகள் அப்பர் ஞானசம்பந்தர் இவ்விருவரின் ஒத்த உள்ளத்தைப் போற்றினர்கள். அவர்களில்லையேல் சமயம் வீழ்ந்திருக்கும். சம்பந்தர் ஒப்பற்ற சமயப் பாதுகாவலர். அவர் அருளென்னும் உள்ளத்து தெய்வீக உணர்ச்சி ததும்பி இருக்கிறது. அதனுல் நாவுக்கரசர் ஞானசம்பந்தருக்கு முந்தியவ ராலுைம் திருஞானசம்பந்தரையே முதல்வராகப் பாராட்டினர். மக்களிடத்தே மிகச்சிறந்த கொள்கைகளைப் பரப்புவதில் அவரைப்போன்ற பரப்புரையாளரைப் பார்க்கமுடியாது. 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்' என்று புகழப் பெற்றுர். முதன்முதல் மூலைமுடுக்குகளிலே சென்று பிரசாரம் செய்தவர் அவரே. அதிகமான திருத்தலங்களுக்குச் சென்று பாடினவரும் அவரே; எங்கே குற்றம் நடக்கின்றதோ அதை தவிர்க்கப் போராடுவோன் உண்மையான வீரன். அப்படிப் பார்த்தால் தீய கொள்கைகளும் பழக்கங்களும் திருஞான சம்பந்தர் காலத்திருந்தமையும் அதனைத் தீர்க்க அரும்பாடு பட்டார் ஞானசம்பந்தர் என்பதும் நன்கு தெரியும். அவர் செய்த புரட்சி, 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்த மொன்று வருகுது' என்றபடி நடந்தது. 'மன்னன் நீறணிந்தான்' என்று கூறுமாறு நொடிப்பொழுதில் மன்னன் மனத்தையே மாற்றி தமிழகத்தையே மாற்றியமைத்த பெருமை ஞானசம்பந்தரையே சாரும். அவர் செய்தது ரத்தப்புரட்சியல்ல. மனமாற்றம் என்னும் உயரியபுரட்சி.

உலக மொழிகள் பலவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்பு எய்தி இருக்கிறது. ஆங்கில மொழி பேசு வோருக்கு அந்த மொழி வாயிலாக அவருக்கு உரிமை உண்டு. ஆங்கில மொழி என்றுலே உரிமை உணர்ச்சி வாய்ந்த மொழி என்பர். தர்க்கத்தில் சம்ஸ்கிருதம், விஞ்ஞானத்தில் ஆங்கிலம் சிறந்திருக்கிறது. தமிழ் மொழி இறைவனைக்கண்டு - அந்த உயர்ந்த தத்துவத்தை விளக்குவதிலே சிறந்து விளங்குகிறது. இந்தக் கருத்து மொழியாராய்ச்சியில் கூறப்படுகிறது. இலக்கிய மலர்ச்சி, மக்கள் வாழ்வில் திருப்பம் காண உரிமை உணர்ச்சி தேவை. அதனை நன்கு விளக்குகின்றுர் பாரதியார். அவ்வழியில் முதன் முதல் சென்று விளக்கிக் காட்டியவர் திருஞானசம்பந்தர். பாவகையில் சங்க காலத்தில் இல்லாத கவிவகை காட்டினர்.

மறைமலையடிகள் திருஞானசம்பந்தரை நல்லிசைக் கவிஞன் என்பர். சேக்கிழார் பிறர் பாடாத புது தமிழில் ஞானசம்பந்தர் செந்தமிழ் நூலை விகற்பச் செய்யுளால் பாடினுர் என்பர். அவர் கொடுக்கும் அட்டவணை திருமுறையாராய்ச்சிப் பிழிவு எனலாம். பிற்காலத்தார் அதனைப் பார்த்துத்தான் பாடினுர்கள். கவிதைச் சிறப்புக்குக் காரணமானவர் திருஞானசம்பந்தர்.

ஞானசம்பந்தர் தம்மைத் தமிழோடு சேர்த்து தமிழ் ஞான சம்பந்தர் என்று கூறிக்கொள்ளுகிருர். அடைமொழிகள் இரு வகையில் வழங்கும். இயைபின்மை நீக்கல். பிறிதின் இயைபு நீக்கல். ஒன்று இனத்தைப் பிரித்துணர்த்தும். மற்ருென்று பண்பை உயர்த்திக் காட்டும் ஞானசம்பந்தர் பல இடங்களில் தமிழோடு தம்மைச் சேர்த்துக் கூறியது பண்பை உயர்த்திக் காட்டுவதே. அக்காலத்தில் மக்கள் இயக்கத்தை உண்டாக்கி அதற்குப் பொறுப்புவாய்ந்த உயர்ந்த தலைவராக அமைந்தவர் ஞானசம்பந்தர். தமிழர் தலைவர். தமிழ்ப் பண்பைப் பாதுகாத்த வர். பிறமொழியில் இல்லாத பெருமை, அதாவது கடவுளை - கடவுள் அருளை - அன்பை உணர்த்துவது தமிழ். 'ழ்' என்பதை எழுத்துப்பேருகக் கொண்டு தமி எனப் பிரித்து முதல்வன், இறைவன் எனப் பொருள் கூறலாம். 'தமியருள்' என இலக்கியமும் கூறுகிறது. கடவுளை உணர்ந்தமொழி, கடவுள் உணர்ச்சி ஊட்டும் மொழி என்று உலகினருக்கு அறிவிப்பதற்கு அவர் தம்மைத் தமிழ் ஞானசம்பந்தர் என்று அழைத்துக் கொண்டனர்.

இயற்கைக்கும் தமிழுக்கும் மிகச் சிறந்த ஈடுபாடுண்டு. சங்கப் பாடல்கள் இயற்கை இயற்கையாக பாடப்பெற்றிருக்கும். இயற்கைக் காட்சியைக் காட்டி இறை உணர்ச்சியை மக்களுக்கு உணர்த்தும் தன்மையாளர் திருஞானசம்பந்தர். இயற்கையால் இறைவன் உண்டென்னும் தன்மை உணரப்படுகிறது. அத் தன்மையை உணர்த்த தமிழ் ஞானசம்பந்தர் என்று கூறினுர்.

சம்பந்தர் குணத்தில் சிறந்த மக்களின் பொருப்புவாய்ந்த தலை வர். சேக்கிழார் 'செய்யனே திரு ஆலவாய்மேவிய ஐயனே' என்ற பாடலில் 'பையவே' என்பதற்கு ஐந்து காரணங்கள் காட்டுவர். தலைவன் வழிகாட்டி நடத்துபவன். அஞ்சாது நடத்தும் ஆற்றல் உள்ளவர் சம்பந்தர். அதை உணர்த்துவது

'மானினேர்விழி மாதராய்' என்ற பாடல். மூன்ருவது சொல்லு கிறபடி நடப்பவரே சிறந்த தலைவர். ஞானசம்பந்தர் அத்தன்மை யினரேன அவர் பாடல் விளம்பும். சொன்னபடி நடந்துகாட்ட உன் திருவடிகளில் என்னைச் சேர்த்துக்கொண்டு அருள்செய் என்று கூறுகிருர்.

தமிழ் தத்துவ அமைப்புமொழி. திருஞானசம்பந்தரே முதன் முதலாக தத்துவத்தை அடிப்படையாகக்கூறி விளக்கினர். பிற தத்துவமுறைநூல்கள் விளக்காத முறையில் பாடினுர். முத்தன்மையில் இறைவன் விளங்கும் உண்மையை - சைவ சித்தாந்தத்தை முதன்முதல் வழங்கினுர்.

தமிழர்கள் 'யாதும் ஊரே யாவரும் கேளீர்' என்ற பரந்த மனப்பான்மையினர். 'வாழ்க அந்தணர் வானவராரினம்' என்ற பாடல் அதனைப் பிற்காலத்தே விளக்கவந்தது. அருண கிரியாரும் முப்பாற் சொல் கவிதையின் மிக்கதேன்று திருக் குறளுக்கு மேம்பட்டதாகக் கூறினர். பரந்த மனப்பான்மையில் தமிழ் ஞானசம்பந்தர் என்று கூறினர்.

திருக்குறட் கருத்தை விளக்கினுர் ஞானசம்பந்தர். 'உரன் என்னும் தோட்டியான்' என்ற குறளில் வரும் 'ஓர் ஐந்து' என்பதற்கு விளக்கமாகத் 'தொண்டர் அஞ்சுகளிறும்' என்று கேதார பதிகத்தில் கூறிச்செல்கிருர். இவ்வாறு முற்கால கருத்துக்களை விளக்கிப் பாடுதலின் தமிழ் ஞானசம்பந்தர் என்று கூறிச்சென்றனர். ஆதலின் சிவனடியே சிந்தித்து தமிழர் நல் வாழ்வினைப் பேற நல்லிலக்கணமுண்டாக்கிப் பண்பாட்டை வளர்த்த சிறந்த தலைவர் - தமிழகப் பேரியார் தமிழ் ஞான சம்பந்தர் எனக்கூறலாம்.

சொல்லின் செல்வர், டாக்டர், திரு. R. P. சேதுபிள்ளை B. A., B. L., D. Litt., அவர்கள் (தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை. "புகலியர்கோன்" என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றியதன் சுருக்கம்.

இன்று சம்பந்தர் திருநாள். திருஞானசம்பந்தருக்கும் குருஞானசம்பந்தருக்கும் உள்ள தொடர்பு பேரிது. குருஞான சம்பந்தர் வரலாறு பாண்டி நாட்டில் துவங்கி சோழ நாட்டிற்கு

வந்த பெருமை உடையது. திருஞானசம்பந்தர் வாழ்வு சோழ நாட்டில் தோன்றி பாண்டிநாட்டில் பெருமை பெற்றுச் சிறப்பு வாய்ந்தது. 'பாண்டிநாடும் சோழநாடும் சைவத்திற்கு இருகண்கள்' என்று சொல்லலாம் பாண்டிநாட்டுப் புலவர்களை சோழ நாடு வரவேற்றது. தமிழ் நாட்டின் எப்பாகத்தில் இருந்தாலும் அவர்கள் தமிழுக்கும் சைவத்துக்கும் தொண்டு செய்பவர்கள் ஆவர். 'சீர்திகழ்காழி' என்று தேவாரமே சொல்லுகிறது. சீர்காழி இன்று சிதைந்து சீகாழி என்று எழுதப்படுகிறது. திருத்துதற்குக் காசுபணம் தேவையில்லை. ஆசைதான் வேண்டும். அதுகூட இல்லை அரசினர்க்கு. சம்பந்தர் தோன்ருவிடின் சைவ சமயம் எந்நிலை அடைந்திருக்குமோ? அவரே சைவத்தை நிலைநாட்டிய பெருமைக்குரிய அருட் சான்ருேர் எனலாம்.

தமிழ் மயமான - தமிழின் சாரமான தமிழ்ச் சுவையை வடித்தெடுத்த காரணத்தால் தமிழ் ஞானசம்பந்தர் எனப் பட்டனர் என்ற கருத்து வரலாற்றில் பொருந்துகிறது. சிறந்த தமிழ்த் தொண்டர் - ஞானசம்பந்தர் 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்' சிறப்பைத் தமக்கே உடையவர். தமிழுக்கு உயிராக இருந்த ஞானசம்பந்தர் எனலாம். சம்பந்தரைப் புகலியர் கோன் என்கிறது பெரியபுராணம். புகலி, சீர்காழியின் பன்னிரண்டு திருப்பெயர்களில் ஒன்று. சீர்காழியைப்போல வேறு எந்த நகருக்கும் பன்னிரண்டு பெயரில்லை. அதனுல் காழியின் பெருமை புலனுகிறது; சிறப்பு வாய்ந்த சீர்காழிக்குப் பல காரணங்களால் பல பெயர் வழங்கலாயிற்று.

பன்னிரு பெயரில் புகலி ஒன்று. புகல் - என்பதனடியாகப் பிறந்த சொல் புகலி. புகல் - அடைக்கலம். 'புகலுண்டோ - அடைக்கல முண்டோ' புகலோடு இகரம் சேர்ந்து - புகலி ஆயிற்று. புகல்தருவது புகலி. அடியவருக்கும் ஆன்ருேருக்கும் அடைக்கலம் தருகிறது. வானவர்கோன் இந்திரனுக்கு அடைக்கலம் தந்தது. சூரன் அக்கிரமத்தால் துன்புற்ற இந்திரன் இந்திராணியோடு சீர்காழியில் புகலடைந்து வாழ்ந்ததைக் கந்தபுராணம் கூறுகிறது. 'புகலி' என்று பெரியோர் அமைத்துள்ள சொல்லழகு அறிதற்குரியது. அங்கு வாழ்ந்த சைவ சமயநெறியாளர் ஞானசம்பந்தர். 'பூம்புகலூர் மேவிய புண்ணியனே உன்னுடைய பொன்னடியை அடைந்தேன்'

என்று பாடப்படுகிறது. புகலி பெரியோர்கள் புக ஏற்ற இடமாக விளங்கியது. அவ்வூர் ஞானசம்பந்தரை ஏற்று அடைக் கலந்தந்து சிறப்பித்தது. திருநாவுக்கரசருக்கு சம்பந்தர் வாயிலாக அடைக்கலம் தந்தது.

'பூழியர் கோன் வெப்பொழித்த புகலியர்கோன்' பூழியர் கோன் பாண்டியன். தமிழ் சிறக்கின்ற முறை, தமிழின் சொல்லாட்சி முறை அழகுற அமைந்துள்ளது. புகல்; புகலி; புகலியர். மதுரை மதுரையார் என்பதுபோல,

" வாழியரோ வாழி ... ... சூழ்தரும் வையையார்
கோமான் தன் தொல்குலமே " (என்பது சிலப்பதிகாரம்)

வையையார் கோமான் - மதுரையார் கோமான் கொற்கையார் கோமான் என வழங்கிய வழக்கு அறிதற்குரியது. அதுபோல புகலியர் என வழங்கினர். புகலி அவரால் பெருமை அடைந்தது; மக்கள் பெருமை பெற்றனர்.

வீட்டுலகம் தரும் வேந்தன் பெரியவனா? நாட்டுலகாளும் அரசன் பெரியவனா? என்ற வினாவிற்கு விடையளிக்கிறது சிலம்பு. 'அந்தமில் இன்பத்து அரசாள் வேந்து' பூகலியர்கோன். பூழியர்கோனின் வெப்பொழித்த இடத்திலிருந்து பேச்சைத் துவங்குகிறேன். மன்னனின் நோய் தீர்க்க மதுரை சென்றார் சம்பந்தர். அவர் பாண்டி நாட்டில் செய்த அருமைச்செயல் களும் குற்றாலத்தில் பாடியவைகளும் சிறப்புள்ளவை. இன்று பாண்டியநாட்டார் வழங்கும் சொற்களில், மதுரையில் அன்று திருஞானசம்பந்தரால் தேவாரத்தில் பாடப்பட்ட சொல் ஒன்றுளது. நான் சென்னை மேடையில் பேசும்போது அச்சொல்லைப் பயன்படுத்தினேன், 'பைய' என்ற அச் சொல்லுக்குப் பொருள் புரியாமல் திகைத்தார்கள் பலர். சென்னையின் சிறுமை அப்பொழுதுதான் விளங்கிற்று. தமிழ கத்தின் - தலைநகரத்தில் - சென்னையில் அச்சொல்லுக்குப் பொருள் விளங்கவில்லை. ஒருவர் இலக்கியத்தில் அச்சொல் வழங்குகிறதா? என்றார். அந்த நல்ல தமிழ்ச்சொல் திருஞானசம்பந்தர் கூறினார். சமணர், சம்பந்தர் இருந்த மடத் திற்குத் தீ வைத்த காலை, அவர், அக்கொடுமை பாண்டியனையே சென்று பற்றட்டும் என்றெண்ணி, பையவே சென்று

பாண்டியனுக்கு ஆக' என்று பாடுகிறார். பைய - மெல்ல என்பது பொருள். இன்று அது மெல்ல மெள்ள என்றாகி மொள்ள எனக்கொடுந் தமிழ்ச் சொல்லாக வழங்குகிறது. தில்லையிலும் 25 ஆண்டுகளுக்குமுன் நான் கூறியபோது விளங்கவில்லை. இப்போது தில்லை மக்கள் தெரிந்துகொண்டிருக்கலாம். சம்பந்தர் காலத்தில் வழங்கிய சொல், நல்ல செந்தமிழ்ச்சொல். இன்று கொடுந் தமிழாக வழங்கப்படுகிறது. சம்பந்தர் தீயை அவன் மேல் ஏன் ஏவினார்? காவலன்தான் நாட்டில் நடக்கும் நன்மை தீமைகளுக்குப் பொறுப்பாளி.

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ?"

என்று மன்னவன் கடமைகளை அழகுற விரித்துரைக்கிறார் சேக்கிழார்.

அறமாகிய கோட்டையில் நாட்டை ஆளுபவன் காவலன். அறத்தையே கோட்டை கட்டிக் காப்பவன். தீயவர் இருக்க இடம் தந்தான் பாண்டியன். மதுரையைச் சூழ்ந்து 8 மலைகள் உண்டு. அங்குத்தியானம் செய்பவர்களுக்குப் பிறவிக்கொடுமை இல்லை. அந்த மலைகளில் சமணர்கள் வசிக்க இடம் தந்தான். பரங்குன்றம் முதலியன அம்மலைகள். மற்றவற்றிற்குப் பெயர் தெரியவில்லை. ஆனைமலையைத் தேவாரம் அழகாகக்கூறுகிறது. எட்டுமலைகளையும் பற்றிக்கொண்டு பகல் முழுவதும் தவம் செய்வார்போலிருந்து இரவில் தந்திரத்தால் காவலனைத் தங்கள்பால் ஈர்த்தனர். இயல்புக்கு மாறாக உபதேசம் செய்தனர். மந்திரத்தால் பலிக்காவிட்டால் கைத்திறனால் செய்து காட்டினர். எறும்புக்கும் தீங்கு செய்யமாட்டோம் என்று ஏட்டிலே எழுதிய சமணர்கள், அன்புநெறியில் வாழ்கின்ற அடியவர் பெருமக்கள் இருந்த மடத்திற்கே தீவைப்போம் என்று வைத்தனர். 'கொடியாரை வெந்தொறுத்தல்' அன்றோ மன்னவன் அறம். சமணர் கொடுமைக்கு அரசன் இடமளித்ததால் கன்னிநாடு கட்டழிந்து நின்றது. இறைவன் புகலியர்கோனை ஏவிப் பூழியர்கோனைத் திருத்த ஏவினார்.

'ஞானசம்பந்தர் தம்மைப் பாடினார் என்றும் சுந்தரர் பொன்னைப் பாடினார் என்றும் அப்பன்... என்னைப் பாடுவான்'

என்றும் கடவுள் கூற்ருக இக்கால மக்கள் குறையாக எண்ணு கிருர்கள். தான் என்னும் ஆணவம் உடையவர் ஞானசம்பந்தர் என்பதுபோல எண்ணுவார்கள். 'நான் ஆண்டவன் கையில் ஓர் கருவி. எல்லாம் ஆண்டவன் செயலே என்று எண்ணுபவர் சம்பந்தர். ஆனேமலேயை அடைந்தபொழுது - சமணரை வென்ற பின்னர், இவர் சிறுவனுய் மதலேயாய் உள்ளனரே' இவருக்கு என்ன தீங்கு நேருமோ என்று பரிவினுலும் அன்புள்ளத்தாலும் அஞ்சினுள் பாண்டிமாதேவி. நானன்றே குலச்சிறையாரை ஏவி ஞானசம்பந்த வள்ளலே அழைத்துவரச் செய்தேன் என்றெண்ணினுள். அவள் அச்சத்தால் விளேந்த மெய்ப்பாட்டைக் கண்ணுற்ற சம்பந்தர் அப்போது.

"மானினேர் விழி மாதராய் வழுதிக்கு மாபெருந்தேவிகேள்
பானல்வாய் ஒரு பாலனீங்கிவன் என்றுநீ பரிவெய்திடேல்
ஆனேமாமலே ஆதியாய இடங்களிற் பல அல்லல்சேர்
ஈனர்கட் கெளியேன் அலேன் திருஆலவாய் அரனிற்கவே."

என்று பாடினுர். நான் எளியவன் அல்லன். ஆனேமலே ஆண்டவனின் ஆற்றல் - சிவனுற்றல் எனக்கு இருக்கிறது. இது அவன் பணித்த பணி. இந்த ஈனர்கட்கு நான் எளியவன் அல்லேன் என்று கூறுகிருர்.

'ஆதியாய' என்ற சொற்றெடர் ஏனே ஏழு மலேகளேயும் உணர்த்துகிறது. திருஞானசம்பந்தர் தம் நெஞ்சில் கைவைத்து 'அரன் நிற்கவே' என்று பாடி யிருக்கவேண்டும். அவர் தம் பெருமையை உணர்ந்தவர். ஆண்டவன் தன்னேக் கருவியாகக் கொண்டவர் என்ற உண்மையை உணர்ந்தவர். இயற்கையில் இறைவனேக் கண்டவர் சம்பந்தர். திருமுருகவேள் அவர்கள், இயற்கையில் இறைவன் உலகம் கண்டார் என்று தம் பேச்சில் கூறினுர்கள். குற்ருலம் இயற்கை நலம் வாய்ந்த ஓர் இடம். அதற்கு 2 பதிகங்கள் உள்ளன. திருக்குற்ருல மலே அழகு' சோலே அழகு, வானநதி அழகு, அருவி வீழ் அழகு இவற்றைக் காட்டி இறைவனிடத்து வழிப்படுத்துகிருர். குற்ருலத்தில் குரங்குகள் அதிகம். பாபநாசம் குரங்கே பாறை விட்டு இறங்கே என்றும் குற்ருலத்துக் குரங்கே கொம்பைவிட்டு இறங்கே என்றும் சிறுவர்கள் விளேயாட்டாகக் கூறுவர். குற்ருலத்தில் வானரங்கள் அதிகம். வானரங்களேக் கண்டால்

சிறுவர்களுக்கு ஓர் மகிழ்ச்சி. பிள்ளைப் பிராயத்திலே திருஞான சம்பந்தர் வானரங்களைக் கண்டால் விடுவதில்லை. தமது பாடல்களிலே அவைகளைப்பற்றிப் பாடினுர். இவர் சிறுவர் என்பதற்கு இது ஒரு அகச்சான்ருகலாம். யானைகளைக் கண்டாலும் சிறுவர்களுக்கு விளையாட்டாக இருக்கும். அதன் பெருத்த கால்களும் முறம்போன்ற காதுகளும் அவர்களுக்கு வியப்பை ஊட்டலாம். யானையைக்கண்ட சிறுவர்கள் அதனை அகலாது அணுகாது தீக்காய்வார்போல அதனைச் சூழ்ந்து செல்வர். உளநூல் ஆசிரியர் இதனை ஆராய்கின்றனர். காளத்தி சென்ருர் திருஞான சம்பந்தர். கண்ணபிரான் வழிபட்ட திருத்தலம் காளத்தி அங்கே கருங்குரங்கு அதிகம். தேவாரத்தைக் கொண்டு அந்தக்காலத்தில் எந்த எந்த ஊரில் எந்த வகையான இயற்கை சிறந்திருந்தது என்றறியலாம்.

‘கல்ல திரங்கின்று கருமந்தி விளையடும் காளத்தி மலையே’ என்று கூறி, ‘கல்லதிர’ என்ற சொற்ருெடரால் மலைவளத்தை அழகாகக் கூறுகிருர். குற்ருலத்தில் குரங்கு சந்ததியாக இன்று வாழ்வனவும் வாழைத் தோட்டத்தில் வயிற்றில் கட்டிய குட்டியோடு சென்று விருந்து உண்கிறது.

“மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்தும்”

மாந்துதல் - வயிருர உண்ணுதல். குற்ருல மலையின் முதலிரண்டடியில் இயற்கை வளத்தைக் கூறிப் பின்னிரண்டடிகளில் இத்தகைய சிறப்பு வளமிக்க மலையிலிருக்கிருன் இறைவன். அங்கு ஆண்டவன் குறும்பலாவின் கீழ் உறைந்திருக்கிருன். வழிபடும் ஆண்களும் பெண்களும் பூமணம் சூழச் செல்லுகின்றனர். மலர்தூவி வழிபடுகின்றனர். அதனைக் கண்ட யானை நானும் இவ்வாறு வழிபடுவேன் என்று மேலே சென்று வேங்கை மரத்தினடியில் நின்று வேங்கையின் பொன்னிற மலர்களைக் கோத்துக் கோத்தாகப் பறித்து இறைவன் இருக்கும் குறும்பலாவிற்குப் பிடியுடன் சென்று தூவி வழிபடுகின்றது.

“நறுந்தண் மலர்க் கோத்தை மத்தகத்தேந்தி, பிடியும் களிறும் உடன் வணங்கும் குறும்பலாவே” என்று பாடுகிருர் திருஞானசம்பந்தர். அங்கு வாழும் யானைகளும் வானரங்களும்

சிவனடியார்களைப் பார்த்துத் தாமும் அவர்கள்போல இறைவனை வழிபடும் காட்சியினைத் தம் கவித்திறத்தினுல் காட்டுகின்ருர். இயற்கையில் இறைவனைக் காட்டிய பெருமையே அவரைத் தமிழ் ஞானசம்பந்தர் என்று பேசவைத்தது.

திருஞானசம்பந்தரின் தேவாரம், அருளுணர்ச்சி ஊட்டும் சிறந்த செல்வத்தைத் தரும் இலக்கியச் செல்வம். சீர்காழியில் அம்மை 'அமுத ஞானம்' குழைத்தூட்டத் திருமுலைப்பால் உண்ட பெருமான் ஞானசம்பந்தர். இறைவன் அருள் பெற்றவர். இறைவன் அருளால் "உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்" கைவரப்பெற்ருல்தான் ஞானசம்பந்தர் போன்ற ஞானசம்பந்தராகத் திகழ முடியும். சம்பந்தர் பாடலில் தொல் காப்பிய மணம் உள்ளது. அவர் நூல்களை ஓதாமலே கலை ஞானத்தால் உள்ளத்திலே சேர்ந்திருந்தன அவை. பாட்டின் போக்கால் சுந்தரரையும் சம்பந்தரையும் பிரித்துக் காட்டலாம். சுந்தரர் வருந்திக் கற்றவர். சம்பந்தரோ ஆண்டவன் அருளால் சிறுவயதில் அருந்தமிழ் பாடினுர். அத்தகைய செல்வர்தோன்றிய சீர்காழியின் பெருமை எல்லாம் விளங்கவேண்டும். உண்மைக் கருத்துக்கள் மக்கள் உள்ளத்திலும் கருத்திலும் பரவிப் பண் பாடு தோன்றிச் சிறந்த நேறி விளங்கவேண்டும்.

## மூன்ரும் நாள் - திருநாவுக்கரசர் திருநாள்

31—5—58 சனிக்கிழமையன்று திருப்புகழ் மணி, திரு. T. M. கிருஷ்ணசாமி அய்யர் B. A., B. L., அவர்கள் "சமயாசாரியர்கள்" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றி யதன் சுருக்கம்.

பாலவயதிலேயே கவி யெனப் புகழப் பெற்றவர் திருஞான சம்பந்த மூர்த்திகள். கவிகளில் பாலகவி என்றும் முதியகவி என்றும் வேறுபாடில்லை. இருப்பினும் சிறப்பாகக் கூறப் பெறுவதால் இங்ஙனம் நாம் அழைக்கின்ருேம். கவிபாடும் தன்மையில் இளமையிலேயே சிறந்திருந்ததால் இராமநாதன் செட்டியார் அவர்கள் பாலகவி என்ற பட்டமுடையவராகத் திகழ்கின்ருர். பாலகவி எனப்பட்ட சம்பந்தர் முதல் மற்ற சமயாசாரியர் நமக்குத் திருமுறைகளில் கூறியிருப்பது யாதெனில் ஆண்டவனருளைப் பெறுதல், என்ற ஒன்றுதான்.

அவனருளைப் பெற்றால்தான் ஆனந்த வாழ்வு வாழ முடியும். அவ்வாறு ஒவ்வொரு மனிதனும் வாழ விரும்ப வேண்டும். எப்போதும் அழுதுகொண்டே யிருக்கலாகாது. அதனால்தான் நால்வரும் நம்மை நோக்கி, ஆண்டவனருளைப் பெறுங்கள். ஆனந்தக் கடலிலே திளையுங்கள். அவன் ஆனந்த சொருப மாக இருக்கின்றான். நமது துன்பங்களை ஒழிப்பவன். இன்பத்தைத் தருபவன், அசுரர்களை ஒழித்தவன் என்றெல்லாம் திருமுறை வாயிலாக அறுவுறுத்துகின்றார்கள். மனிதர்கள் உள்ளத்தில் இறைவன் ஆனந்தமயமாக இருக்கின்றான். 'நித்யானந்தமாகி நிஷ்களங்கமாகி, நம்மில் ஒருவனாக இருக் கின்றான். 'ஆண்டவனிடத்தில் அன்பு காட்டின் அவன் நமக்கு அன்பு காட்டுவான். அன்புருவாகவே இருக்கின்றான் ஆண்டவன்.

இந்த அன்பையே பக்தி யென்கிறோம். கீதையில் கண்ண பிரான் அர்ச்சுனனைப் பார்த்துக் கூறுகின்றான். 'அன்பில்லாமல், பக்தியில்லாமல் என்னை யாரும் அடைய முடியாது' என் கின்றான். இதைத்தான் அருணகிரியாரும் 'பக்தியால் யான் உன்னைப் பலகாலும் பற்றியே மா திருப்புகழ்பாடி, என்று சொல்கின்றார். அவன் இருக்கும் உள்ளமுடைய இவ்வுடலை 'ஊன் நிறைந்த பாண்டமிது என்றார் பத்ரகிரியார். உலகில் சக்தி என்று கூறப்படுவது என்ன? அதுதான் வலிமை. சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர முத்தியாகி, என்றார் ஒரு பெரியவர். அந்தச் சக்தியுடன் இருக்கும் ஆண்டவனை நமது உள்ளத்தில் அழியாது நினைவு வைத்துக் கொள்ளல்வேண்டும். 'உங்களுக்குத் தீர்க்கமான சௌக்யம் வேண்டுமானால் ஆண்டவனை மறவாமல் வழிபடுங்கள், என்பார்கள் பெரியோர்கள், அதற்கு நாம் என்ன செய்யவேண்டும்'. அடிக்கடி 'சிவாயநம' என்று உச்சரித்துக் கொண்டேயிருந்தால் அவனது ரூபமும் நீங்காமலிருக்கும். 'இசை நம்மை ஆண்டவனது திருவடிகளுக்கு இழுத்துச் செல் கிறது. சப்தஸ்வரங்களும் இந்த அடிப்படையிலே ஒலிக் கின்றன. நாதமே வடிவாக உள்ளவன் இறைவன். எல்லாம் உனது மயமே என்கின்றன வேதங்கள்' என்று சங்கராச்சாரியான் எப்போதும் கூறுவார்கள்.

'ராம் ராம் என்று கீழே விழுந்தான் ஹம்சன், என்ற வரலாறு இதைத்தான் காட்டுகிறது. யோகம் நிறைந்த

சாக்ஷாத்பரம் பொருளை எப்போதும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இதை நால்வருள் ஒருவராகிய நாவுக்கரசர் 'இரு நிலனய்த் தீயாகி நீருமாகி இயமானனய் எறியும் காற்றுமாகி ஆகாசமாகி, அட்டமூர்த்தியாகிப் பெருநலமும் சுற்றமும் பெண்ணும் ஆணும் பிறவுருவும் தம் உருவும் தானேயாகி நிமிர் புன்சடையடிகள் நின்ற தன்மையைக் கூறுகின்றார். மந்திரங்கள் இதனையே குறிக்கின்றன. சிவனை இன்ன இடத்தில் இருக்கின்றான், இன்ன இடத்திலில்லை என்று கூறமுடியாது. எந்த இடத்தில் நாமங்களை ஜபிக்கின்றோமோ, அந்த இடத்தில் தோன்றி நமக்கு அருள் வழங்குவான். சிவனும் சக்தியும் மனிதனுக்கிருக்கும் இரண்டு கைகளைப்போல. அதாவது இடதுகை, வலதுகை போல. தோடுடைய செவியன்' என்று முதலாவதாக எழுந்த கவித்துவம் ஆண்டவனது திருக்கருணை யால் எழுந்ததே. அதை முதலிற்கொண்டவையே திருமுறைகள்.

'நண்ணினர் வினைகள் தீர்ப்பார் நனிபள்ளியடிகளாரே, என்கிறது திருமுறை. நாவுக்கரசர் 'மனத் தகத்தான்தலை மேலான் வாக்கினுள்ளான் வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான்' என்று இயல்பைக் கூறுகின்றார். நம் வாக்கிலிருப்பதால் நமசிவாய என்று அடிக்கடி கூற வேண்டும் என்று முன்பே சொன்னேன். அந்த வாக்கு தெய்வீக வாக்கு. அந்த வாக்கை உபயோகித்தால் அவன் கருணைக்குப் பாத்திரமாகலாம். ஒரு இடத்தில் அப்பர் 'ஓசை ஒலியெலாம் ஆனய் நீயே, உலகுக்கு ஒருவனய் நின்றாய் நீயே' என்றார். அவனை நினைக்க, நமது மனமும், வாக்கும், சுத்த மடையும். ஓம் நமசிவாய, என்று கூறவேண்டும். கடலில் பாய்ச்சியபோதுகூட அப்பர் 'நற்றுணையாவது நமசிவாயவே' என்றே சொல்கின்றார். அதுபோல நாமும் எப்போதும் மறக்க லாகாது. ஏதோ எனக்குத் தெரிந்தவரையில் சொன்னேன். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திலே அடிக்கடி இவைபோன்றவை களை கூறி இன்பத்திலே திளைப்பார்கள்.

எல்லாவற்றிற்கும் அவனே துணை. நாமத்தைக் கூறுதலே ஜெபம். 'ஜெபமாலை தந்த சற்குருநாதா' என்றார் அருணகிரி நாதர். உலகைப் படைத்த அவனேயின்பம். கருணைக்கடல்,

பேரின்பம். உய்யும் வழி எல்லாம் அவனே. இவ்வாறு ஜெபிக்கின்றவர்களே சீவன் முக்தர்கள். இங்குள்ள எல்லோரும் சமயாச்சாரியர்கள் கூறியபடி பஞ்சாக்ஷரத்தை ஜபித்து சீவன் முக்தர்களாக வேண்டும் என்பதே என் விருப்பம். ஓம் நமசிவாய என்ற ஒரே மந்திரமே எல்லாத் துன்பங்களையும், எல்லாக் கவலைகளையும் நீக்கவல்லது. 'காருண்ய காபாலமூர்த்தே' கைலாஸ வாஸா, சந்த்ர சூரியப் பிரியா என்று நூல்கள் அவனைச்சிறப்பிக்கின்றன. அவனை நினைந்தே பல சீவன் முக்தர்கள் பேறடைந்துள்ளார்கள் சமயாச்சாரியர்கள் எங்கும் சென்று அவனருளைப் பரப்பி, நமக்கு அறிவுறுத்தினார்கள். அந்த ஆனந்தத்தை நாம் எல்லோரும் அனுபவிக்க சமயாச்சாரியர்கள் காட்டிய வழியே சாலச் சிறந்தது.

தருமை ஆதீனப் புலவர், வயிநாகரம், பாலகவி, திரு. வே. இராமநாதஞ் செட்டியார் (தேவகோட்டை) "திருநேரிசையும் திருத்தாண்டகமும்" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றியதன் சுருக்கம்.

திருநாவுக்கரசரது திருமுறைகள் நான்கு, ஐந்து, ஆறு, என்று ஆன்றோர்கள் குறித்துள்ளனர். வேதத்தின் மத்தியிலே விளங்குவது பஞ்சாக்ஷரம். அப்பர் திருமுறையில் திருக்குறுந்தொகை நடுநாயகமாக விளங்குகிறது. வேதம் மூன்று ; அதில் நடுவனது யஜீர்வேதம். அது ஏழு காண்டங்களையுடையது. அதைப்போல 5ஆம் திருமுறை திருக்குறுந்தொகை. அது 101 பதிகங்களையுடையது. பாலைத்துறைப் பதிகத்தில் 11பாடல்களை பாடியுள்ளார். அந்த 11 பாடல்களில் நடுவணதாக யிலங்குவது 'விண்ணூர்' என்று தொடங்கும் பாடல். பாடலின் நடுவில் பஞ்சாக்ஷரத்தை நடுவரியில் குறிப்பிட்டுச் சிறப்பிக்கின்றார். எளிமையான பாடல்களாகிய அப்பர் பதிகங்களைப் படிப்பதற்குச் சாத்திர தோத்திரப் பயிற்சி தேவையில்லை. அந்த நாவுக்கரசரை 'திருத்தொண்டின் நெறிவாழ வரு ஞானத் தவமுனிவர், என்றும் 'நண்ணரிய சிவானந்த ஞானவடிவாகி அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசு அமர்ந்திருந்தார் என்றும் கூறுகின்றார் சேக்கிழார். ஆண்டவன் அடியவர் உள்ளத்தே புகுந்து நிற்பான். அவனைத் தேடி நாம் செல்ல வேண்டியதில்லை. அவனாக நம்மிடத்தில் வரவேண்டும்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன் ; அவனைப் பூவும் நீருங்கொண்டு நக்கு நிற்பவர் அவர்தமை நாணியே, என்றார் அப்பர். உண்மை அன்புக்குக் கட்டுப்பட்டு அவன் நம்மை யடைகின்றான். உண்மையன்பு நாம் அவனிடத்தில் செலுத்த வேண்டும். மணிவாசகர் கூறியது போல நாடகத்தால் அடியவர் போல நடிக்கக்கூடாது. நட்பினர் இன்பக்காலத்தே நெருங்கி நிற்பர். ஆனால் துன்பக்காலத்தில் யாரும் நெருங்கமாட்டார்கள். துன்பத் திற்கியாரே துணையாவார் என்று வினவுகின்றார் திருவள்ளுவர்.

ஆண்டவனது உருவத்தை உள்ளக்கிழியிலே எழுதி வழிபட வேண்டும் என்றார் தாண்டக வேந்தர். ஆகையினால் பஞ்சா க்ஷரத்தையும், அதன் பயனாக விளங்கும் அப்பர் பெருமான் திருக்குறுந்தொகையையும் நாம் எப்போதும் நினைந்து உருகி, வழிபட்டு உய்யும் நெறியையடைவோம்.

திரு V. M. சுப்பிரமணிய அய்யர் M. A அவர்கள், சென்னை. "திருநேரிசையும் திருவிருத்தமும்" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றியதன் சுருக்கம்.

இறைவன் சமயாச்சாரியர்களை அங்கங்கே தோற்றுவித்துத் தன் கருணையால் உலகை - உலகத்து மக்களை வாழ்விக்கின்றார். தாண்டக வேந்தன், வேந்தன் என்ற சிறப்புப் பெயர்கள் அப்பர் பெருமானுக்கே உரியவை.

திருவிருத்தம் என்ற வகையினை ஆழ்வார்கள் பாடிய திவ்யப் பிரபந்தங்களிலும் காணலாம். அடியவர்களை இன்ன லுள் ஆழ்த்தமாட்டான்; விலக்குவான் என்பதைத் 'தருமராசர்க் காய் வந்த கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கை வீரட்ட னாரே' என்று அப்பர் குறிப்பிடுகின்றார். இதில் என்ன சிறப் பென்றால் தருமராசன் வேறு, அவன் ஏவல் வழி நிற்கும் கூற்று வன் வேறு. இந்தவுடம்பு மேலாகப் பார்க்கும்போது மிக அழ காயிருக்கிறது. உள்ளே பார்த்தால் அழகு குன்றியிருக்கிறது. உதாரணம் கொண்டு பார்த்தால் ஒரு பையானது மேலே பார்க்கும் போது மிக அழகாக இருக்கிறது. உள்ளே திருப்பிப் பார்த்தால் மிகவும் அழகின்றி இருக்கிறது. இதைப்போலவே அதுவும் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

நற்றுணையாவது நமச்சிவாயவே என்றது போல இந்த உடம்புக்கு அவனே துணை. அவன் நாமமே துணை. திருமுறைப் பாடல்களே சாலச் சிறந்த துணை. அமர் நீதியைப்பற்றிக் குறிப்பிடும்போது வடபாற் கயிலை தென்பால் நல்லூர், என்று பதிகத்தில் கூறுகின்றார். மனமேனும் தோணியை, மதியேனும் கோல்கொண்டு சினமேனும் சரக்கை ஏற்றி, மதன் எனும் பாறை தாக்கும். அப்போது நமசிவாய என்று கூறி பிறவித் துன்பம் நீக்க வேண்டும் என்று இதனை உருவகமாகக் கூறுகின்றார்.

பல பெரியோர்களாலும் காண முடியாத ஆண்டவனது திருவடிகளை நாவுக்கரசரும், ஏனைய சமயாச்சாரியர்களும், ஆழ்வார்களும் தங்களது திருமுறைப் பாடல்களிலும், திருவிருத்தங்களிலும், நன்கு கூறியுள்ளனர். அந்த முறையில் அந்தத் திருவடிகளில் நாம் அன்பைச் செலுத்துவோமானால் ஏனைய துன்பங்கள் ஒழிந்து, இன்பக் கடலைக் கண்டு பேரின்ப வெள்ளத்தில் என்றும் திளைத்திருக்கலாம். ஆகையினால் திருமுறைப் பாடல்களையும், தெய்வப் பாசுரங்களையும் இடைவிடாது பாராயணம் பண்ணவேண்டும். (தொடரும்)



---

# செய்திகள்

தருமபுர ஆதீனத்தில்

## குருபூஜை விழா

### 24 ஆவது குருமகாசந்நிதானம்

விளம்பிஸு வைகாசிமீ 14உ (27—5—58) மங்கள வாரம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளுக்கு, குருபூஜை விழா நடைபெற்றது. காலை மாலை குருமூர்த்த ஆலயத்தில் விசேஷ அபிஷேக] ஆராதனைகளும் சொற்பொழிவுகளும் திருமுறைப் பாராயணமும், இசையரங்கும் நிகழ்த்தப்பெற்றன. அன்பர் பலர் வந்து தரிசித்தும் கேட்டும் குருவருள் பெற்றும் உய்ந்தனர். காலை மாலை இருவேளை களிலும் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன. மாலை 6 மணிக்கு இசை நிகழ்ச்சியும் நடைபெற்றது. சங்கீத கலாமிருதம், களக்காடு, திரு. S. ராமநாராயண அய்யர் - பாட்டு. கும்பகோணம், திரு. S. சிவசாமி - பிடில். குத்தாலம், திரு. R. விசுவநாத அய்யர் - மிருதங்கம். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானமவர்கள் காலைமாலை ஆகிய இருவேளைகளிலும் மேலக் குருமூர்த்த ஆலயத்திற்கு எழுந்தருளி வழிபாடாற்றினார்கள். மாயூரம் பிரமுகர்கள் பலர் வந்து வழிபட்டனர். விழாமலராக நேபால யாத்திரை என்ற நூல் வழங்கப்பெற்றது.

## ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி மகோற்சவம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ ஞானபுரீசுர ஆலயத்தில் ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிக்கு விளம்பி ஆண்டு வைகாசித்திங்கள் 16 ஆம் நாள் முதல் 25 ஆம் நாள் முடிய (29—5—58, 7—6—58) உள்ள நாட்களில் மகோற்சவம் மிக்க சிறப்போடு நடைபெற்றது. காலை மாலை இருவேளைகளிலும் பஞ்சமூர்த்திகள் புறப்பாடு நிகழ்ந்தது. விழாநாட்களில் விசேஷ நாகஸ்வரம், பேண்டு வாத்தியம் இவற்றின் முழக்கம் வானைப் பிளந்தன. சிறப்புவிழா நாட்களில் பற்பல வர்ணங்களைத் தோற்றுகின்ற வாணவேடிக்கைகள் காண்போர் கண்களைக் கவர்ந்தன. நாள்தோறும் அதிர்வேட்டுக்களின் முழக்கம் விண்ணதிரச் செய்தது.

விழாவிற்கேன அமைக்கப்பேற்ற பந்தலின் முகப்புக்கள் தமிழரின் கலேத்திறனின் மாண்பை விளக்கின. மின்விளக்குகளின் ஒளி இரவைப் பகலாக்கியது. மேலும் மின் விளக்குகளின் வேலேப்பாடு அத்தோழிலாளர்களின் உள்ளக் கற்பனேயை விளக்குவதா யமைந்தது. வழிபாட்டிற்குச் சேல்கின்றவர்களுக்கு மனத்தூய்மை - சிவசிந்தனே இவை இன்றியமையாதன என்ற கருத்தை உட்கோண்டு சேய்தன போன்றிருந்தன.

வடக்கேயுள்ளவளேவில் நுழையும்போது நம் கண்களில் படுவது, நமசிவாய, என்ற பஞ்சாக்ஷரமே, அடுத்துப் பந்தலின் முகப்பின் மேல்பாகத்தில் பஞ்சமூர்த்திகள் காட்சி யளிப்பது போன்றும், அதற்குக் கீழே துர்க்கை மகிஷாசூரனே வதம் சேய்வது போன்ற உருவங்களில் மின்விளக்குகள் அமைக்கப்பட்டு வேலேப்பாட்டுடன் விளங்கிக் காணப்படுகின்றன.

## திருநெறியத் தெய்வத் தமிழ் மாநாடு

29—5—58 வியாழக்கிழமை முதல் ஆதீன மடாலய முகப்பில் உள்ள திருநேறிய தேய்வத் தமிழ் மன்றத்தில் பேறிரஞர் பலர் சிறந்த கருத்துக்களே வழங்கினர். பிறகு இசை நிகழ்ச்சிகளே எடுத்து விளக்கும் தன்மை போருந்திய நாடகங்கள் ஆதீனக் கல்வி நிலேய மாணவ மாணவிகளால் சிறந்த முறையில் நடிக்கப்பேற்றன. மக்கள் திரளாக வந்து கண்டு மகிழ்ந்தனர். நாடகத்தில் பங்குகோண்ட மாணவ மாணவிகளே ஊக்குவிப்பதற்காக ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அருளால் அவர்களுக்குப் போற்பதக்கங்களும், வேண் போற் காசுகளும் வழங்கப்பேற்றன. சோற்போழிவுகளின் போருள் விளக்கம் தனியே மலராக வேளியிடப்பேறும்.

## ஆதீன பிரதம குருபூஜை விழா

7—6—58 சனிக்கிழமையன்று குருமுதல்வர் ஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளின் குருபூஜைவிழா மிக்க சிறப்போடு கோண்டாடப்பேற்றது. அன்று காலே 9 மணி அளவில் ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஆலவாய்ச் சோக்கலிங்கப் பேருமானுக்கு விசேஷ ஆராதனேகள் நிகழ்த்தப்பேற்றன.

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும், ஸ்ரீ காசி மடம், இளவரசு வித்துவான், ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர் களும் குருபூஜை விழாவில் சிவமூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானையும் குருமூர்த்தியையும் வழிபட்டனர். பல நகரங்களி லிருந்தும் அன்பர்கள் வந்து வழிபட்டனர்.

8--6--58 அன்றும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் வழிபாடு மிக்க சிறப்போடு நிகழ்ந்தது. அன்று இரவு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானமவர்கள் பட்டணப் பிரவேசமாகி எழுந்தருளினார்கள்.

சீகாழியில்

## ஸ்ரீ சட்டநாதசுவாமி வழிபாடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டநாதசுவாமி தேவஸ்தானத்தில் மலைக்கோயிலின் உச்சியில் தென்பால் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சட்டநாதசுவாமிக்கு விளம்பிஹு வைகாசிமீ ௩௨ (16—5—58) வெள்ளிக்கிழமை சிறப்பு வழிபாடாக (மூன்றாவது ஆண்டு விசேஷ அபிஷேக ஆராதனைகளும், புறப்பாடும். சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. மக்கள் திரளாக வந்து வழிபட்டனர். வழக்கம்போல அந்தணர்கள் செய்த தொண்டு களை ஆண்டவனும் விரும்பி ஏற்றுக்கொண்டான்.

## திருஞானசம்பந்தர் அபிஷேகம்

நிகழும் விளம்பி ஆண்டு வைகாசித் திங்கள் 21 ஆம் நாள் (3—6—58) செவ்வாய்க்கிழமை காலையில் ஸ்ரீ திருஞான சம்பந்தப்பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. மாலை 5 மணி முதல் திருமுறைப் பாராயணமும் சமயச் சொற்பொழிவுகளும் இரவு சுவாமி புறப்பாடும் நடை பெற்றன. அன்பர்கள் வந்து கண்டு உய்ந்தனர். தருமை ஆதீனப் புலவர், விரிவுரை வேந்தர் நாகை தேசீய உயர்பள்ளித் தமிழாசிரியர், வித்துவான், திரு. வை. மு. சண்முக தேசிகர் 'திருஞானசம்பந்தர்' என்ற பொருளில், தக்க பக்க வாத்தியங் களுடன் சத்கதாகாலக்ஷேபம் செய்தார்கள்.

# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம், பிர்மஸ்ரீ கே, முத்துஜோதிடர் அவர்கள்,
திருவிடைமருதூர்.

(விளம்பிஞூ ஆனிமீ 1உ முதல் 31உ முடிய)

(15—6—58 முதல் 15—7—58 முடிய)

## 1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼

அசுவதி முதல் பாதம் சுபமாகும், தனவரத்துண்டாகும். அசுவதி 2, 3, 4 பரணி முதல் பாதமும் விவாஹாதி சுப சந்தோஷங்களையும் பந்து கல்யாண வைபவங்களையும், சுபகாரியத்தையும் உண்டுபண்ணும். பரணி 2. 3; 4 விதேசகமனத்தையும், வாகன பயத்தையும் துர்நிமித்தங்களையும் தரும். தெய்வபலம் மறைந்திருக்கும். கார்த்திகை முதல் பாதம் போன வியாதியை வரவழைக்கும். குடும்ப கலகம் ஏற்படச்செய்யும். மனம் நிம்மதி இராது. திங்கள். புதன் சுபமாகும்.

## 2. விருஷபம். கார்த்திகை ¾, ரோஹிணி - மிருகசீரிஷம் ½

விருஷபராசி ஒன்பது பாதங்களும் சுபசந்தோஷங்களையும், கட்டிட வேலைகளையும், ஸ்தாவர ஜங்கம சோத்துக்களின் கிரய விக்ரயங்களையும், நஷ்டமான பொருள் வரத்தையும் தரும். அடிக்கடி சஞ்சாரம் ஏற்படும். வெகுநாளாகத் தீராத வியவகாரம் ராஜியாக முடியும். புதன். வெள்ளி சுபமாகும்.

## 3. மிதுனம். மிருகசீரிஷம் ½, திருவாதிரை - புனர்பூசம் ¾

மிருகசீரிஷம் 3, 4 பாதங்கள் இடம் மாறச் செய்யும். நூதன உத்தியோகப் பிராப்தி ஏற்படும். திருவாதிரை நான்கு பாதங்களும் சமமாக நடக்கும். வியாதிகள் நீங்கும். கடன் நிவர்த்தியாகும். பெரியோர் அன்பு கிடைக்கும். குடும்பத் தொல்லை அதிகமாகும். பந்துமித்ர கல்யாண வைபவம் ஏற்படும். புனர்பூசம் 1, 2, 3 பாதங்களும் சுபத்தைத் தரும். வியவகாரம் ஜயிக்கும். சத்துருக்கள். சரண் அடைவார்கள். நினைத்ததெல்லாம்

சுலப சாத்தியமாகும். தானதர்ம பிரதிஷ்டா பலன்கள் கிடைக்கும். பெரியோர் அன்பும், தெய்வபலமும் கிட்டும். சனி, செவ்வாய் சுபமாகும்.

4. கடகம். புனர்பூசம் $\frac{1}{4}$, பூசம் - ஆயில்யம் $\frac{3}{4}$

புனர்பூசம் 4ம் பாதம் ஆரோக்கியத்தையும் சிரத்தாமேதை வித்யை, ஞானம், அபூர்வ சக்தி இவைகளை உண்டுபண்ணும். பூசம் நான்கு பாதங்களும் சுபாசுபம் மாறி மாறி நடக்கும். அடிக்கடி சஞ்சாரம் உண்டுபண்ணும். எந்தக் காரியமும் தவக்கத்துடன் நடக்கும். மனம் தயங்கும். அற்பமான மனுஷ்யாளுடைய சேர்க்கையையும் ஈதி பாதைகளையும் தரும். ஆயில்யம் நான்கு பாதங்களும் சுபசந்தோஷங்களையும், லோகாபவாத பய நிவர்த்திகளையும் தந்து தெய்வ பலத்துடன் நடக்கச்செய்யும். புதன், வெள்ளி சுபமாகும்.

5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் $\frac{1}{4}$

மகம் நான்கு பாதங்களும் சந்தோஷமுண்டாகும். உத்தியோக உயர்வு ஏற்படும். பெரியோர் அன்பு கிடைக்கச் செய்யும். ஆரோக்யமுண்டாகும். பூரம் நான்கு பாதங்களும் அலைச்சல் ஏற்படும். தொழில் குறையும். வீண் செலவுகள் அதிகமாகும். உத்திரம் முதல் பாதம் வியாபார விருத்தி யாகும். நூதன தொழில் ஏற்படும். தூரப் பிரயாணம் காரிய ஸித்தியாகுதல், விஜயம், கீர்த்தி எல்லாம் சுபமாகவே நடக்கச் செய்யும். வெள்ளி, சனி, சுபமாகும்.

6. கன்னி. உத்திரம் $\frac{3}{4}$, ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$

உத்திரம் 2, 3, 4 பாதங்கள் காரியவிக்னத்தையும் தாமதத்தையும் தரும். தெய்வபலத்தால் எல்லாம் முடிவில் சுபமாக நடக்கும். ஹஸ்தம் முதல் பாதம் லாபத்தையும் கீர்த்தியையும் பெரியோர் அன்பையும் குடும்ப சுகத்தையும் உண்டுபண்ணும். மத்தியில் காரியங்கள் தாமதமாய்ப் பூர்த்தி யாகும். ஹஸ்தம் 2, 3, 4 பாதங்கள் பிரதிஷ்டா பலன்களையும் சதா சிவகைசவ பக்திகளையும், திவ்ய தரிசன சேவைகளையும், ஆரோக்கியத்தையும், நஷ்ட தனம் கிடைத்தலையும், வியவகார ஜயத்தையும் உண்டுபண்ணும். மத்தியில் நாஸ்தீக ஜனங்களால்

துன்பங்களையும் அபவாதங்களையும் தந்து சத்துருக்களையும் உடனே நாசம் செய்யும். சித்திரை 1, 2 பாதங்கள் பந்துமித்திர கலியாண வைபவங்களையும், குடும்ப சுகத்தையும் தரும்.

7. துலாம். சித்திரை $\frac{1}{2}$, சுவாதி - விசாகம் $\frac{3}{4}$

சித்திரை 3, 4 பாதங்கள், விசேஷ சுபமிராது. அஞ்ஞாத வாசம்போல் நடக்கும். சுவாதி நான்கு பாதங்களும் மஹா யஞ்ஞ பலன்களைத்தரும். உலகப்பிரசித்தியைத் தரும். எதிர் பாராத லாபங்களை உண்டுபண்ணும். தொழில் ஓங்கும். ஆரோக்கியமுண்டாகும். விசாகம் 1, 2, 3 பாதங்களும் இடம் மாறச்செய்யும். கவலையைத்தரும். அதிக விரயம் உண்டு பண்ணும். செவ்வாயும் புதனும் சுபமாகும்.

8. விருச்சிகம். விசாகம் $\frac{1}{4}$, அனுஷம் - கேட்டை.

விசாகம் நான்காம் பாதம் வியாதியைத் தரும். குடும்ப கலகம் ஏற்படும். தொழில் நஷ்டம் உண்டுபண்ணும். அனுஷம் நான்கு பாதங்களும் வீண் அலைச்சல்களையும், கடன் தொல்லை களையும், உத்தியோக பங்கத்தையும் உண்டுபண்ணும். கேட்டை நான்கு பாதங்களும் இடம் மாறி சுபமுண்டுபண்ணும். குடும்ப சுகம் ஓங்கும். நூதன வஸ்திராபரணச் சேர்க்கைகள், கலியாண வைபவங்கள் ஏற்படும். புதன், வியாழன் சுபமாகும்.

9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$

மூலம் நான்கு பாதங்களும் சுபமாய் நடக்கும். பந்து மித்திர சேர்க்கையும், இல்லற சுகமும் உண்டுபண்ணும். பூராடம் நான்கு பாதங்களும் விசேஷ கௌரவங்களையும், தான தர்மாதி பிரதிஷ்டா பலன்களையும், கடன்நீங்கி சுகமுண்டுபண்ணு தலையும், குடும்ப சுகத்தையும் தரும். உத்திராடம் முதல் பாதம் ஆரோக்கியமேற்படும். கடன் நீங்கும். மங்கள காரியங் கள் ஏற்படும். குடும்பசுகம் உண்டாகும். புதன், வியாழன் சுபமாகும்.

10. மகரம். உத்திராடம் $\frac{3}{4}$, திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$

உத்திராடம் 2, 3, 4 பாதங்கள் தூர பிரயாணத்தைத் தரும், உத்தியோகம் ஏற்படும். சந்தோஷம் உண்டுபண்ணும்.

திருவோணம் நான்கு பாதங்களும் என்றும் கண்டிராத சந்தோஷத்தை அனுபவிக்கச் செய்யும். சாசுவத குடும்ப பிரதிஷ்டையும் உத்தியோக உயர்வும் ஏற்படும். பெரியோர், மேலோர் அன்பு கிட்டும். அவிட்டம் 1, 2 பாதங்கள் இடம் மாறி சுபமுண்டு பண்ணும். வம்ச விருத்தியாகும். மேல்பதவிகள் ஏற்படும். சந்தோஷமாகும். வெள்ளி சனி சுபமாகும்.

**11. கும்பம். அவிட்டம் $\frac{1}{2}$, சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**

அவிட்டம் 3, 4 பாதங்கள் பந்தம் விடச்செய்யும். கடன் நீங்கும். ஆரோக்கியமேற்படும். சதயம் நான்கு பாதங்களும் வீண் செலவுகளையும், அபஜயத்தையும் தரும். பூரட்டாதி 1, 2, 3 பாதங்கள் சுபமாகும். குடும்ப சுகம் ஏற்படும். விவாகாதி சுப பலன்கள் ஏற்பட்டு நூதன வஸ்திராபரணச் சேர்க்கைகளையும், சந்தோஷத்தையும் உண்டுபண்ணும். புதன், வியாழன் சுபமாகும்.

**12. மீனம். பூரட்டாதி $\frac{1}{4}$, உத்திரட்டாதி - ரேவதி.**

மீனராசி 9 பாதங்களும் சுபமாக நடக்கும். நூதன உத்தியோக பதவிகள் ஏற்படும். கிரஹ சுகமுண்டாகும். வம்ச விருத்தியாகும். நஷ்ட தனப்பிராப்தியும் வாகன லாபங்களும் ஏற்படச்செய்யும். தொழில் ஓங்கும். தெய்வபலம் பிரகாசிக்கும். மேலோர், பெரியோர் அன்பும் ஆசியும் கிடைக்கும். மனம் சாந்தியடையும். கீர்த்தி பத்திரம் கிடைக்கும்- வெள்ளி, சனி சுபமாகும்.

குறிப்பு :- உலக நிலையில் பல மாறுதல் காட்டும். சாதுக்களுக்குப் பயமுண்டுபண்ணும். ஈதிபாதைகள் அதிகமாகும். தெய்வம் ஒதுங்கிநின்று சாதுக்களையும் பக்தர்களையும் மாத்திரம் காப்பாற்றும். துஷ்டர்கள் கபடவேஷம்போட்டு சாதுக்களையும் மைனாரிடிகளையும் வஞ்சிப்பார்கள். அந்தசமயம் சிவபெருமான் மனுஷ்யருபமாகவே தோன்றி பயத்தைப்போக்கி பக்தர்களை ரக்ஷிப்பார். இம்மாதம் முதல் உலகில் தான்யாபிவிருத்திக் காரியங்களில் பல சிரமங்களைக் காட்டும். தர்மம் ரக்ஷிக்கும். சுபமாகும்.

தருமபுர ஆதீனத்திற்குச்சொந்தமான
சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில்



ஸ்ரீ முத்துச்சட்டைநாதரை
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வழிபடுதல்.

தருமை ஆதீனத்துக்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேஸ்வரஸ்வாமி தேவஸ்தானம்



மேலராமன்சேத்தி கிராமம் கூட்டுறவு சாகுபடியாளர் சங்கத் தொடக்கவிழாவில்
சென்னை மாநில அறநிலய அமைச்சர் ' நல்லறங்காவலர் ' கனம். திரு. M. பக்தவத்சலம் B. A., B. L. அவர்கள்

தருமை ஆதீன மடாலயத்தில் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
அவர்களுடன்



சென்னை மாநில
மின் இயல்துறை அமைச்சர் கனம் V. ராமையா அவர்களும்,
மலேயா நாட்டு சுகாதார மந்திரி கனம் V. சம்பந்தம் அவர்களும்,

தருமை ஆதீனத்துக்குச் சொந்தமான திருக்குறுக்கை தேவஸ்தானத்தில்



மன்மதன் இரதிதேவி (உற்சவமூர்த்தி)

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

ஸ்ரீ ஞானம்பிகா சமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிகோயில்

# மகோற்சவப் பத்திரிகை

ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயில்

18—5—'59 முதல் 27—5—'59 முடிய

## திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு

நடைபெறும்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## சிவபெருமான்

சீர்கொண்ட ஆனந்த மாகி எங்கும்
செறிவாகிப் பரமாகித் திரம தாகி
ஏர்கொண்ட கருணைதிரு வுருவ மாகி
எழில்கொண்ட மலைமகளை இடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்த னாதிக்
கடவுளர்வந் தடிபரவும் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவன் அடியைத் தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம்.

தருமபுர ஆதீனக் குருமுதல்வர்

## ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்திடாமல்
தாரணி அன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பார்புகழும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

(சம்பந்தசரணாலயர்)

தருமபுர ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

# திருநாள் விவரம்

| தமிழ் ௵ ௴ ௳ | இங்கிலீஷ் ௳ ௴ ௵ | வாரம் | திருநாள் | உற்சவ விவரம் |
|---|---|---|---|---|
| வைகாசி 3 | 17—5—59 | பானுவாரம் | | பூரம் 31-48 க்குமேல் உத்திர நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 36-15 க்குமேல் 40 க்குள் தனுர் லக்னத்தில் அனுக்ஞை, விக்நேசுவர பூஜை, வாஸ்து சாந்தி. மிருத்ஸங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம். |
| 4 | 18—5—59 | சோமவாரம் | 1 | உத்திர நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 0-2க்குமேல் $1\frac{1}{2}$க்குள் விருஷப லக்னத்தில் ஸ்ரீ ஞானும்பிகா சமேத ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமிக்கு மஹோத்ஸவ துவஜாரோஹணம். |
| 5 | 19—5—59 | மங்களவாரம் | 2 | கற்பகவிருட்சக் காட்சி. |
| 6 | 20—5—59 | புதவாரம் | 3 | பூதம், பூதகி, இடும்ப வாகனக் காட்சி. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வைகாசி | 7 | 21—5—59 | குருவாரம் | 4 | நந்தி, காமதேனு, குதிரை வாகனக் காட்சி. |
| | 8 | 22...5—59 | சுக்கிரவாரம் | 5 | சகோபுர ரிஷப வாகனக் காட்சி. |
| | 9 | 23—5—59 | ஸ்திரவாரம் | 6 | யானை, அன்னம், ஆட்டு வாகனக்காட்சி. |
| | 10 | 24—5—59 | பானுவாரம் | 7 | திருக்கல்யாண வைபவம், புஷ்ப விமானம், வெள்ளி ரதக்காட்சி. |
| | 11 | 25—5—59 | சோமவாரம் | 8 | குதிரை, கிளி, யானை வாகனக் காட்சி. |
| | 12 | 26—5—59 | மங்களவாரம் | 9 | உதயாதி நாழிகை 8-45க்குமேல் 11-15க்குள் கடக லக்னத்தில் மகா ரதாரோகணம். திருத்தேர். |
| | 13 | 27—5—59 | புதவாரம் | 10 | காலை ஸ்ரீ சபாநாயகர் தீர்த்தங்கொடுத் தருளல். பிறகு பஞ்சமூர்த்திகளும் ரிஷபாருடராய் எழுந்தருளிக் காவிரியில் தீர்த்தங் கொடுத்தருளல். இரவு துவஜாவரோஹணம். |
| | 14 | 28—5—59 | குருவாரம் | | மௌன உற்சவம். |
| | 15 | 29—5—59 | ஸ்திரவாரம் | | சண்டேசுரர் உற்சவம். |



உ

சிவமயம்

## திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

## ஸ்ரீஞானம்பிகா சமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி கோயில்

# மகோற்சவப் பத்திரிகை

பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் மீது வைத்த எல்லையில்லாப் பெருங்கருணையினாலே காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நிகழ் குறியாம் சிவலிங்கமாகி திருவுருக்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தலங்கள் பலவற்றுள் இந்திரன். அகத்தியர், தருமன் ஆகியோர்களால் பூசிக்கப்பெற்றதும், காவிரி முதலிய தீர்த்தங்களால் சிறப்புற்றதும், வில்வாரண்யம் என்னும் சிறப்புத் திருநாமம் உற்றதும், குருபீடஸ்தானமும் ஆகிய தருமபுரத்தின்கண் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ ஞானம்பிகா சமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிக்கு நிகழும் விகாரி ஆண்டு வைகாசித்திங்கள் 4ஆவதுநாள் (18—5—'59) சோமவாரம் தொடங்கி மகோற்சவம் நடைபெறும்

திருநாட்களில் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும் இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெறும். சிவநேசச் செல்வர்கள் யாவரும் வந்திருந்து, திருவிழாக் காட்சியைத் தினமும் தரிசித்தும் சொற்பொழிவுகளைக் கேட்டும் இன்புறுக.

திருக்கயிலாய பரம்பரைத்
தருமபுர ஆதீனம்
கார்பார்,

**சொக்கநாதத் தம்பிரான்.**

தருமபுர ஆதீன மடாலயம்,
விகாரி - சித்திரை 24.

---

ஆதீன மடாலயத் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் மாநாட்டு நிகழ்ச்சிகள் நாள்தோறும் நடைபெறும்.

குருபாதம்

# நிகழ்ச்சிகள்

ஒவ்வொருநாளும் மாலை 6 மணிமுதல் நடைபெறும்

**முதல் திருநாள் 18—5—59 திங்கட்கிழமை**

## திருஞானசம்பந்தர் திருநாள்

சைவ சித்தாந்த சரபம், மகாமகோபாத்யாய
சிவஸ்ரீ. காசிவாசி. ஈசான சிவாசாரியார்
பழநி.

" திருநெறிய தமிழ் "

திரு. P. G. கருத்திருமான் M. L. A.,
கோயம்புத்தூர்.

" இதிகாச இலக்கியம் "

**வித்துவான், திரு. வீ. உலகஊழியர்**
தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

" சேக்கிழார் தெய்வப்பாக்கிழார் "

**வித்துவான், ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்**
சென்னை, தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையம்.

" கலை ஞானக்கடல் "

**நாடகம்**

" கிழக்கும் மேற்கும் "

ஆதீனக் கல்வி நிலைய ஆசிரியர்கள்

## இரண்டாவது திருநாள் 19—5—59 செவ்வாய்க்கிழமை

## திருநாவுக்கரசர் திருநாள்

பல்கலைச் செல்வர், வித்துவான்,
**திரு. தெ. பொ. மீனுட்சி சுந்தரம் பிள்ளை M. A. B. L., M. O. L.,**
தமிழ்த்துறைத் தலைவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்,
" கோதில் மொழிக் கொற்றவனூர் "

வித்துவான்,
**திரு. கு. அருணுசலக் கவுண்டர்**
தமிழ் விரிவுரையாளர், இந்துக் கல்லூரி, திருநெல்வேலி,
" அப்பர் திருத்தொண்டு "

தருமையாதீனப் புலவர்,
திருவாவடுதுறை ஆதீன மகா வித்துவான்,
**திரு. ச. தண்டபாணி தேசிகர்**
தமிழ் விரிவுரையாளர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.
" தாண்டக வேந்தர் "

**வித்துவான், ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**
திருபுவனம் தேவஸ்தானம், கட்டளை விசாரணை,
" திருநேரிசை "

## இசையரங்கு

சாத்தூர், திரு. A. G. சுப்பிரமணியம் குழுவினர்

## மூன்ருவது திருநாள் 20—5—59 புதன்கிழமை

## சுந்தரர் திருநாள்

**வித்துவான், திரு. G. சுப்பிரமணிய பிள்ளை M. A, B. L.,**
தமிழ் ஆராய்ச்சித் துறைத்தலைவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்
" நாத்திகம் பேசாதே "

கயப்பாக்கம்
**திரு. சோமசுந்தரஞ் செட்டியார்**
சென்னை

" நாவலர் காவலர் "

தருமையாதீனப் புலவர், பண்டித, வித்துவான்,
**திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை**
திருவையாறு.

" திருத்தொண்டத் தொகை "

**வித்துவான், ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள்**
திருநள்ளாறு தேவஸ்தானம், கட்டளை விசாரணை

" மீளா அடிமை "

## இசையரங்கு

பழநி, திருமதி விஜயலட்சுமி குழுவினர்

**நான்காவது திருநாள் 21—5—59 வியாழக்கிழமை**

## மாணிக்கவாசகர் திருநாள்

மகாவித்துவான், திரு. K. ஆறுமுக நாவலர்
தலைவர், திருநெறித் தொண்டர் குழாம், நாகர்கோயில்

" உயிரவை நிலை "

புலவர், திரு. N. R. முருகவேள் M. O. L.,
தமிழ் விரிவுரையாளர், கிறித்துவர் கல்லூரி, தாம்பரம்,

" திருவாதவூராளும் தேன் "

தருமையாதீனப் புலவர்
**வித்துவான், திரு. வை. மு. சண்முக தேசிகர்**
தமிழாசிரியர், தேசீய உயர்நிலைப்பள்ளி, நாகப்பட்டினம்.

" பாவையும் கோவையும் "

**வித்துவான், ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**
**திருவாரூர், இராஜன் கட்டளை விசாரணை,**

“ அழுதடி அடைந்த அன்பர் ”

## இசையரங்கு

திருமதிகள் இராதா, ஜெயலட்சுமி குழுவினர்
சென்னை.

**ஐந்தாவது திருநாள் 22—5—59 வெள்ளிக்கிழமை**

## மெய்கண்டார் திருநாள்

சிலம்புச்செல்வர்,
திரு. ம. பொ. சிவஞானக்கிராமணியார்
தமிழரசுக் கழகத் தலைவர், சென்னை,

“ அறமும் அரசியலும் ”

தருமையாதீனப் புலவர் சித்தாந்த சிகாமணி,
திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T.,
**கணித ஆசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சீபுரம்.**

“ பதி முது நிலை ”

செஞ்சொற்கொண்டல், வித்துவான்.
திரு. சொ. சிங்காரவேலனர்
தமிழ்ப் பேராசிரியர், தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரி;

“ இருள்மல நிலை ”

ஸ்ரீமத் முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்
சீகாழி தேவஸ்தானம், கட்டளை விசாரணை.

“ மெய்கண்ட தேவர் ”

## இசையரங்கு

**சங்கீதபூஷணம், திரு. P. சுவாமிநாதன் குழுவினர்**
**தேவார ஆசிரியர், சென்னை. ஆதீன சமயப் பிரசார நிலையம்.**

**ஆறாவது திருநாள் 23—5—59 சனிக்கிழமை**

## அருணந்திதேவர் திருநாள்

**திரு. கீ. இராமலிங்க முதலியார் M. A.,**
ஆட்சிச் சொற்காவலர், சென்னை.

" வழிகாட்டும் வான்பொருள் "

**திரு. நா. கிரிதாரி பிரசாத் B. A., B. L.,**
கோயம்புத்தூர்.

" வான்கலந்த மாணிக்கவாசகம் "

தருமையாதீனப் புலவர், சித்தாந்த சிரோமணி,
சித்தாந்த ரத்நாகரம், மதுரகவி, முதுபெரும் புலவர், வித்துவான்,
**திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்,**
முதல்வர், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

" தண்டமிழின் மேலாம்தரம் "

**ஸ்ரீமத். சட்டைநாதத் தம்பிரான் சுவாமிகள்**
மாயூரம் குமரக்கட்டளை விசாரணை.

" அருணந்தி சிவனார் "

## இசையரங்கு

மதுரை, ரஞ்சிதகான. திரு. சோமசுந்தரம் குழுவினர்

**ஏழாவது திருநாள் 24—5—59 ஞாயிற்றுக்கிழமை**

## மறைஞானசம்பந்தர் திருநாள்

**திரு. S. மீனாட்சிசுந்தர முதலியார் B. A., L. T.,**
தலைவர், கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு

" மெய்ஞ்ஞான வழியில் விஞ்ஞானம் "

" செந்தமிழ்ச்செல்வர் " வாகீச கலாநிதி, வித்துவான்
திரு. கி. வா. ஜகந்நாதன் M. A.,
' கலைமகள் ' ஆசிரியர், சென்னை.

" தவ ஒழுக்கம் "

திரு. ச. சிவகுமாரன், M. A.,
ஏற்றுமதி அலுவலர், பென்னி கம்பெனி, சென்னை.

" சிவம் பெருக்கும் தவ நிலையங்கள் "

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி, வித்துவான்,
திரு. சி. அருணைவடிவேல் முதலியார்
தமிழாசிரியர், பச்சையப்பன் உயர்பள்ளி, காஞ்சீபுரம்.

" மறைஞானசம்பந்தர் "

கதாகாலட்சேபம்

" மீனாட்சிஅம்மை திருமணம் "

திருமதிகள். குமாரி, கௌரி குழுவினர், சென்னை.

எட்டாவது திருநாள் 25—5—59 திங்கட்கிழமை

உமாபதிதேவர் திருநாள்

தருமையாதீனப் புலவர், சித்தாந்த கலாநிதி, வித்துவான்,
திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை
தமிழ் விரிவுரையாளர், தியாகராஜர் கல்லூரி, மதுரை.

" பெரியோர் பேருரை "

திருமதி T. N. அனந்தநாயகி, B.A., B.L., M.L.A.,
சென்னை.

" அருள்நெறி மாண்பு "

சித்தாந்த பண்டித பூஷணம்
திரு. ஆ. ஈசுரமூர்த்தி பிள்ளை
பேட்டை, திருநெல்வேலி,

" சிவப்பிரகாசம் "

வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர்
தமிழ்ப் பேராசிரியர், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி,

" உமாபதி சிவனார் "

இசையரங்கு

திரு. G. N. பாலசுப்பிரமணியம் குழுவினர்,

ஒன்பதாவது திருநாள் 26—5—59 செவ்வாய்க்கிழமை

கமலைஞானப்பிரகாசர் திருநாள்

தருமையாதீனப் புலவர், வயிநாகரம் பாலகவி,
திரு. வே. இராமநாதன் செட்டியார்
தேவகோட்டை.

" திருக்கைலைச் சிறப்பு "

திரு. T. முத்து. கண்ணப்பர் B. A., M. L. C.,
சென்னை.

" சேக்கிழார் கண்ட அரசியல் "

திருவாவடுதுறை ஆதீன வித்துவான், சித்தாந்த சைவமணி
திரு. த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை
குடந்தை.

" சைவ சித்தாந்தம் "

திருவண்ணாமலை ஆதீனப்புலவர், திருமுறைக் கலைஞர், வித்துவான்,
திரு. பட்டுச்சாமி ஓதுவார்
தமிழாசிரியர், பொன்னையா உயர் பள்ளி திருச்சி.

" கமலை ஞானப்பிரகாசர் "

## கதாகாலட்சேபம்

“ திருநீலகண்டர் ”

தருமையாதீன வித்துவான், கீர்த்தனகுலசேகர, சங்கீத சாகித்ய வல்லப, கதாரசாஸ்வாதக, பாகவதர், எம்பார்,

திரு. விஜயராகவாச்சாரியார் குழுவினர்

பத்தாவது திருநாள் 27—5—59 புதன்கிழமை

## குருஞானசம்பந்தர் திருநாள்

முத்தமிழ் வித்தகர், பண்டித, வித்துவான்

திரு. லெ. ப. கரு. இராமநாதஞ் செட்டியார்

தமிழ்த்துறைத் தலைவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

“ குருபக்தி ”

தருமை ஆதீனப் புலவர்

வித்துவான், திரு. வை, குஞ்சிதபாதம் பிள்ளை

தலைமைத் தமிழாசிரியர் நகராளும் கழக உயர் பள்ளி

நுங்கம்பாக்கம், சென்னை.

“ குருஞானசம்பந்தர் ”

வித்துவான், திரு. செ. வேங்கடராமச் செட்டியார்

தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர். அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

“ சிவபோகசாரம் ”

சென்னை மாநில அறநிலைய சமயப் பிரசாரகர்,

திரு. கோ. சிவஞானம்

ஆதீன சமயப் பிரசாரகத் தொண்டர், திருக்கருகாவூர்.

“ சோக்கநாத வெண்பா ”

**மாலை 4-30 மணி**

குன்றக்குடி அடிகளார்

**ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

**திருவண்ணாமலை ஆதீனம். குன்றக்குடி.**

**" நன்மை பெருகு அருள்நெறி "**

**திரு. G. வரதராஜம் பிள்ளை B. A.,**

கோவாபரேடிவ் சென்ட்ரல் பாங்கி, செயலாளர், திருச்சி,

" செம்பொருட் சிறப்பு "

சேந்தமிழ்ச் செல்வி,

புலவர், திருமதி. சி. குழந்தையம்மாள் M. L. A.,

கோயம்புத்தூர்.

" பண்டார சாத்திரங்கள் "

**பத்தாவது நாள் 27—5—59 புதன்கிழமை**

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

## குருபூஜை விழா

**காலை 11 மணி முதல்**

## ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை

வழிபடுதல்

**விழா மலர்**

## ஞானவரண விளக்கம் பகுதி, 2.

**28—5—59 வியாழக்கிழமை**

**காலை 11 மணி முதல்**

## ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை

வழிபடுதல்

**பகல் 12 மணி முதல்**

## மாகேசுவரபூஜை

**மாலை 6 மணிக்கு**

## இசையரங்கு

தருமை ஆதீன இசைப் புலவர்,
எட்டையபுரம் சமஸ்தான வித்துவான், இசையரசு, தேவாரமணி,
சங்கீத சாஹித்ய சிரோமணி,
அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைக்கல்லூரி முதல்வர்,
திரு. M. M. தண்டபாணி தேசிகர் குழுவினர்

இரவு

## பட்டணப்பிரவேசம்

